# உலக அழிவு நிஜமா? எப்போது? எப்படி?



## நாஸ்டர்டாம் கணிப்பு!

பாக்யா வெளியீடு

# உலக அழிவு நிஜமா? எப்போது? எப்படி?

## நாஸ்டர்டாமின் கணிப்புகள்!

பாக்யா வெளியீடு

8, 5வது குறுக்குத் தெரு,
லேக் ஏரியா, நுங்கம்பாக்கம்,
சென்னை - 34.

| | | |
|---|---|---|
| புத்தகம் | : | உலக அழிவு நிஜமா? எப்போது? எப் ? |
| ஆசிரியர் | : | கே. பாக்யராஜ் |
| முதல் பதிப்பு | : | ஆகஸ்டு, 1999 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| விலை | : | ரூ. 10/- (ரூபாய் பத்து) |
| வெளியிடுவோர் | : | சரண்யா பப்ளிகேஷன்ஸ்,<br>8, 5வது குறுக்குத் தெரு,<br>லேக் ஏரியா, நுங்கம்பாக்கம்,<br>சென்னை-34. |
| அச்சிட்டோர் | : | ஆதிசக்தி கிராபிக்ஸ்,<br>24/2, பைக்ராப்ட்ஸ் முதல் தெரு,<br>சென்னை - 14. |

# முன்னுரை அல்ல,
# எச்சரிக்கை!

**பு**த்தகங்களுக்கு முன்னுரை எழுதறது ஒரு சம்பிரதாயம். ஆனா, இந்த நாஸ்டர்டாம்ஸ் கணிப்பு புத்தகத்துக்கு ஆரம்பத்துலேயே முன்னுரைக்கு பதிலா **எச்சரிக்கை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கு.**

இந்த உலகத்துக்கு ஒரு பெரிய ஆபத்து எப்போ எந்தக் கிழமையில வரும்னு நாஸ்டர்டாம்ஸ் கணிப்புகளை வச்சு தெள்ளத் தெளிவா இந்த புத்தகத்துல நாங்க குறிப்பிட்டிருக்கிறது உண்மைதான். அதப் படிக்கிறப்ப, சமீபத்துல நம்ம தெருவுல தற்கொலை பண்ணிக்கிட்ட ஒரு ஆளு திடீர்னு ராத்திரியில நம்ம பெட்ரூம்ல வந்து நம்மள தட்டி எழுப்பற ஒரு பயத்தைக் கூட இந்த புத்தகம் ஏற்படுத்தலாம்.

இருந்தாலும் நாஸ்டர்டாம்ஸ் சொல்ற இந்த கணிப்புகளை வச்சு யாரும் எந்த அவசர முடிவுக்கும் போயிடக்கூடாது. இதை வலியுறுத்திச் சொல்ல நான் கடமைப்பட்டிருக்கிறேன். ஏன்னா,

என்னதான் நாஸ்டர்டாம்ஸ் கணிப்புகள், ஆராய்ச்சியாளர்களை அசத்தற மாதிரி இதுவரைக்கும் நடந்திருந்தாலும் அதுல கூட

ஒரு இருபது சதவிகிதம் நாஸ்டர்டாம்ஸ் சொன்னபடி நடக்காமயும் போயிருக்கு. அதே மாதிரி இந்த உலக அழிவு விஷயமும் நடக்காம போனா நாம எல்லோரும் ரொம்ப சந்தோஷப்பட்டுக்கலாம்.

இந்தப் புத்தகத்தோட முக்கியமான நோக்கம் என்னன்னா, நானூறு வருஷத்துக்கு முன்னால வாழ்ந்த ஒரு தீர்க்கதரிசியான நாஸ்டர்டாம்ஸ் சொன்ன கணிப்புகள் இந்த இருபதாம் நூற்றாண்டு விஞ்ஞான விஷயங்களோட எந்தளவுக்கு சுவாரஸ்யமா ஒத்துப் போகுது? இதைத்தான் இந்தப் புத்தகம் உங்களுக்கு விலாவாரியா எடுத்துச் சொல்லுது.

நாஸ்டர்டாம்ஸ் சொன்னபடி இந்த உலக அழிவு நடக்காமயும் போகலாம். அதுதான் நம்ம நம்பிக்கையும் எதிர்பார்ப்பும். ஆனா அதுக்கப்புறம் கூட வீட்டுல இருக்கிற அத்தனை பேரும் அப்பப்ப புரட்டிப் பார்க்கற அளவுக்கு பல விஞ்ஞானப்பூர்வமான தகவல்களை இந்த புத்தகத்துல தொகுத்து தந்திருக்கிறோம். அந்த மன நிறைவோட அடுத்த நாவல்லயும் நிச்சயமா உங்களை சந்திப்பேங்கற நம்பிக்கையோட இந்த புத்தகத்தை உங்களுக்கு சமர்ப்பிக்கிறேன்.

*அன்புடன்*
*உங்கள்*

# உலக அழிவு நிஜமா? எப்போது? எப்படி?



**பி**ரான்ஸ் நாட்டுல தூக்கநாயக்கன்பாளையம் மாதிரி ஒரு சின்ன கிராமம். அதுல பொறந்தவருதான் நாஸ்டர்டாம்ஸ். ஆனா, இன்னைக்கு அந்த நாஸ்டர்டாம்ஸ் பேரு உலகம் பூராவும் பரபரப்பா மட்டுமில்ல, கொஞ்சம் **பயத்தோடயும்** உச்சரிச்சிட்டிருக்காங்க.

இந்த நாஸ்டர்டாம் ஒரு நானூறு வருஷத்துக்கு முன்னால வாழ்ந்த அந்த காலகட்டத்துல கடல் பயணம்ங்கிறது பாய்மரம் கூட இல்லாம கட்டுமரத்துலதான். அவசரமான போக்குவரத்துக்கு அரேபியக் குதிரைகளைத்தான் நம்பிட்டிருந்தாங்க. ஆகாய விமானங்கிறது புராணங்கள்லேயும் கதைகள்லேயும் கற்பனையாத்தான் பறந்திட்டிருந்தது.



**பாய்மரத்தில் பயணப்பட்டுக் கொண்டிருந்த அந்தக் காலகட்டத்திலேயே நாஸ்டர்டாம்ஸ் மீனுக்குள் வெடிகுண்டுகளையெல்லாம் வைத்து எதிரிகளை தகர்ப்பார்கள் என்று சூசகமாக குறித்துள்ளார். இன்றைக்கு உள்ள போர்க்காலத்து சப்மெரைன்கள் அவரது கணிப்பை மிகச்சரியானது என்று நிரூபிக்கிறது.**

---

ஆனா, அந்தக் காலத்திலேயே இந்த நாஸ்டர்டாம்ஸ் அவரு வாழ்ந்த சூழ்நிலைக்கு கொஞ்சம் கூட சம்பந்தமே இல்லாத **ஆகாய விமானங்களைப் பத்தியும், சப்மெரின்களைப் பத்தியும்** இன்னும் **அணு**

**ஆயுதப் போர்களையும்** ரொம்ப சரியா குறிப்பிட்டிருக்காரு.

அது மட்டுமல்லாம, இந்த இருபதாம் நூற்றாண்டுல உலகத்தையே ஆட்டிப்படைச்ச ஹிட்லர், நெப்போலியன், கென்னடி போன்ற பிரபலங்களோட பேர்களையும் தீர்க்கதரிசனமா குறிப்பிட்டிருக்கிறது நம்ப முடியாத அதிசயம்தான்!

அது எல்லாத்தையும் விட, கிளைமாக்ஸா அந்த நாஸ்டர்டாம்ஸ், இந்த 99-ல உலகம் அழியும்னு ஒரு பெரிய குண்டைத் தூக்கிப் போட்டிருக்காரு. அது எவ்வளவு தூரம் உண்மைங்கிறதை கொஞ்சம் அவசரமாவே புரட்டிப் பார்க்கிற நிலைமையில இருக்கிறோம்.

ஏன்னா, அவரு சொன்ன காலக் கெடுவுக்கு நாட்களையும், நிமிஷங்களையும் எண்ணற நெருக்கடிக்கு வந்துட்டோம்.

400 வருஷத்துக்கு முன்னால இந்த நாஸ்டர்டாம்ஸ் தன்னோட கணிப்பு கவிதைகள்ல சில ஊர் பேர்களை குறிப்பிட்டிருந்தாரு. அதுக்கு என்ன அர்த்தம்னே சமீபகாலம் வரைக்கும் யாருக்கும் தெரியல.
சுசா,
சியன்னா,
போயிட்டா,
ஹெரிட்ரியா
இந்த நாலு ஊர்களும் அப்படி ஒண்ணும் நியூயார்க், லண்டன் மாதிரி அப்பவும் பிரசித்தி பெறல. இப்பவும் பிரபலமாகல. ஆனா, ரத்தினச் சுருக்கமா சித்தர் பாட்டு மாதிரி நாஸ்டர்டாம்ஸ் எழுதின கவிதைகள்ல சம்பந்தமே இல்லாம இந்த ஊர் பேரெல்லாம் எதுக்காக வந்தது?

MICHAELIS NO-
STRADAMI.

Deß Weitberu
mbten / Hocherfarnen
Philosophi Astrologi/vnd Medi-
ci/zwey Bücher / darinn warhafftiger / gründeli-
cher / vnd volkomner bericht gegeben wirt / wie
man erstlich einen vngestalten leib / an Weib vnd
Manns personen außwendig zieren / schön/ vnd
junggeschaffen machen / vnd allerley wolriechen-
de/ köstliche / krefftige wasser / pulfer/ öl/ seyffen/
rauchkertzlin/bisamkuglen / zu mancherley gebre-
chen dienstlich/ artlich zubereyten. Vnd wie man
folgents allerley früchte auff das künstlichest / vnd
lieblichest/in zucker einmachen/vnd zur notturfft
auff behalten soll. Erstlich in Frantzösischer sprach
von jhme beschriben : Nun aber/vnserem Vatter-
lande zu gütem / in das gemain Teutsch auff das
trewlichst verdolmetscht/durch Hieremiam
Martium/ bestelten Doctorn der
Artzney zu Augspurg.

Mit Röm. Kay. May. freyheit/
nit nach zutrucken.

M. D. LXXII.

LES
PROPHETIES
DE M. MICHEL
NOSTRADAMVS.

*Reueuës & corrigées ſur la coppie Imprimée à Lyon par Benoiſt Rigaud. 1568.*



**1572ல் ஜெர்மன் நாட்டில் நாஸ்டர்டாம பற்றிய ஒரு புத்தகம் வெளியிடப்பட்டது. அரிதான அந்த புத்தகத்தின் ஒரு பக்கத்தை இன்றைக்கும் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள்.**

இந்த ஊர்களைப் பத்தி நாஸ்டர்டாம்ஸ் பிரெஞ்ச் மொழியில எழுதின ஒரிஜினல் கவிதையை கீழே கொடுத்திருக்கோம்.

*Apparaitra vers le septentrion*
*Non loin de Cacer L'etoile chevelue:*
*Suze, Sienne, Boece, Eretrion,*
*Mourra de Rome grand,*
*la nuit desparue.*

இதோட ஆங்கில மொழிபெயர்ப்பு.

There will appear
towards the North
Not far from Cancer
the bearded star:
Susa, Siena, Boeotia, Erectria,
The Great one of Rome will die,
the night over.

வருஷக்கணக்குல ஆராய்ச்சி மனப்பான்மையோட நாஸ்டர்டாம்ஸ் கவிதைகள பரிசோதனை செஞ்சவங்களுக்கும் இந்த நாலு ஊர் பேருக்கும் அர்த்தம் என்னான்னு ஆரம்பத்துல புரியல. ஆனா, அதுக்கு என்ன அர்த்தம்னு சமீப காலத்துலதான் விஞ்ஞான ரீதியா ஒரு விளக்கம் கிடைச்சது. அப்பத்தான் நாஸ்டர்டாம்ஸ் விஞ்ஞானிகளே பார்த்து மிரள்ற அளவுக்கு விஸ்வரூபம் எடுத்து நிக்கறாரு. மேலே, அந்த நாஸ்டர்டாம்ஸ் சொன்ன சுசா, சியன்னா, போயிட்டா, ஹெரிட்ரியா இந்த நாலு ஊர்கள் மேலயும் ஒரு கோடு போட்டோம்னு வெச்சுக்கங்க. அதுதான் **ஆப்ரிக்கா ஐரோப்பா பிளேட்டுன்னு** இன்னைக்கு விஞ்ஞானம் ஒத்துக்குது.

அது என்னங்க பிளேட்டு?

விஞ்ஞானம் வளராத காலத்துல இந்த பூமிங்கிறது ஒரு பெரிய மண் உருண்டைன்னு நினைச்சிட்டிருந்தாங்க. இந்த இருபதாம் நூற்றாண்டுலதான் இந்த பூமிங்கிறது 12 பிளேட்டுகள், அதாவது தகடுகள் ஒண்ணோடு ஒண்ணு சேர்ந்த ஒரு உருண்டைன்னு தெரிய வந்தது. மண்டையோட்டை பார்த்தா அது அஞ்சாறு எலும்புகள் ரொம்பப் பொருத்தமா பல்சக்கரம் மாதிரி சேர்ந்திருக்கிறது




**உலக உருண்டையில் இணைந்துள்ள பிளேட்டுகளை இந்தப் படம் சித்தரிக்கிறது!**

தெரியும். அதேமாதிரி 12 பிளேட்டுகளோட சேர்க்கைதான் இந்த பூமிப்பந்து. இந்த 12 பிளேட்டுகளும் காலங்காலமா அப்பப்ப இஞ்ச் கணக்குல நகர்ந்துட்டு இருக்காம். அதனாலதான் திடீர்னு கடலா இருக்கிற பகுதி மலையா உயர்ந்து போகுது.

இன்னும் சில இடத்துல பெரிய பெரிய மலைகளெல்லாம் கடலுக்குள்ளே ஜலசமாதி அடைஞ்சிருச்சாம். பூகம்பம், எரிமலை வெடிப்பு, கடல் கொந்தளிப்பு இதுமாதிரி உள்ள இயற்கையோட சீற்றங்கள் அத்தனைக்கும் இந்த **பிளேட்டுகள் நகர்தல்**

ஒரு காரணம்னு விஞ்ஞானிகள் கண்டுபிடிச்சிருக்காங்க. நம்ம இமயமலை கூட இந்தியன் பிளேட்டும், ஏசியா பிளேட்டும் நகர்ந்து மோதுனதுனால கடலா இருந்த பகுதி உயர்ந்துதான் அது இமய மலையா ஆயிருக்கு.

மண்டையோட்டுல இருக்கிற எலும்புகளின் சேர்க்கையைப் பார்த்து அதுதான் தலைவிதின்னு சில பேரு சொல்லுவாங்க. அது உண்மையோ பொய்யோ நமக்குத் தெரியாது. ஆனா, இந்த பூமி உருண்டையோட இந்த பிளேட்டு மூவ்மெண்டுதான், சேர்க்கைகள்தான் **இந்த பூமியோட தலைவிதியை நிர்ணயிக்குதுன்னு** தாராளமா சொல்லலாம்.

நாஸ்டர்டாம்ஸ் வாழ்ந்த காலத்துல உலகம் 12 பிளேட்டுகளோட சேர்க்கைங்கறது தெரியாது. அதேமாதிரி இந்த நாலு ஊர்கள் உள்ள பகுதியிலதான் ஆப்பிரிக்கா ஐரோப்பா பிளேட்டு இருக்கிறதுங்கறதும் அந்த காலத்து விஞ்ஞானிகளுக்குக் கூட தெரியாது. இருந்தாலும் நாஸ்டர்டாம்ஸ் அந்த நாலு ஊர்கள் பத்தி தன்னோட கவிதைகள்ல மிகத் தெளிவா குறிப்பிட்டிருக்காரு.

இன்னும் நாஸ்டர்டாம்ஸோட ஒரிஜினல் கவிதைகள வெகு நுணுக்கமா ஆராய்ஞ்சு பார்த்தா சில விஷயங்கள் தெள்ளத் தெளிவா தெரியுது.

வானத்துல இருந்து ஏதோ ஒண்ணு ரொம்ப பெருசா விண்கல் மாதிரி மேலே சொன்ன ஊர்கள் உள்ள அந்த பிளேட்டு மேல விழலாம்னு சில ஆராய்ச்சியாளர்கள் இந்த நாஸ்டர்டாம்ஸ் கவிதைகளை வச்சு கணிக்கிறாங்க. இந்த விண்கல் விழறது கூட அப்பப்ப உலகத்துல நடந்துக்கிட்டுத்தான் இருக்கு.

இந்த நூற்றாண்டோட ஆரம்பத்துல அதாவது 1908ம் வருஷத்துல சைபீரியா பகுதியில இருக்குற **டுங்குஸ்காங்கற** இடத்துல ஒரு சின்ன விண்கல் விழுந்தது. அதோட அகலம் ஆஃப்ட்ரால் 160 அடிதான். ஆனா அந்தக் கல் ஒரு செகன்டுக்கு 31 கி.மீ. வேகத்துல இன்னும் கரெக்டா சொல்லப் போனா ஒரு மணிக்கு 1,11,600 கிமீட்டர் வேகத்துல வானத்தை பொத்துட்டு வந்து விழுந்தது. விழுந்த இடம் அடர்ந்த காட்டுப்பகுதிதான். இருந்தாலும் ஐம்பது மைல் தள்ளி நடந்து போயிட்டிருந்த ஆளுங்க சட்டையெல்லாம் தீப்பிடிக்க ஆரம்பிச்சதாம். இந்த உஷ்ணம் அந்த வட்டாரத்துல எழுநூற்றம்பைது மைல் சுற்றளவுக்கு பாதிச்சது. ஆடு, மாடெல்லாம் சுருண்டு விழுந்துச்சு.

ஏறத்தாழ ஆயிரக்கணக்கான மைல் தள்ளியிருக்கிற லண்டன்ல கூட இதோட வெளிச்சம் பயங்கர மின்னல் மாதிரி தெரிஞ்சுதாம். இன்னைக்கும் அந்த ஏரியாவுல இந்த விண்கல் விழுந்த பாதிப்புகளோட சுவடுகள நாம பார்க்க முடியும். இந்த தம்மாத்துாண்டு விண்கல் டுங்குஸ்கா பகுதியில விழுந்ததை உலகம் பூராவும் உள்ள சீஸ்மோகிராப் கருவிகள் பதிவும் செஞ்சது. மேற்கொண்டும் விஞ்ஞானிகள் இதைப்பத்தி ரொம்ப காலமா ஆராய்ச்சி பண்ணாங்க.

அதுல ஒரு முக்கிய செய்தி என்னன்னா அண்டார்டிகா பனிப்பிரதேசத்துல திடீர்னு சம்பந்தமே இல்லாத ஒரு தூசுப்படலம் அந்த பனி மலைகள்ல படிஞ்சது. அதை நுணுக்கமா ஆராய்ஞ்சு பார்த்தப்ப இன்னொரு அதிசயமும் வெளிப்பட்டது. ரொம்ப **பரிசுத்தமான இரிடியம்**கிற ஒரு தாதுப் பொருள் அந்த தூசுப்படலத்துல கண்டுபிடிச்சாங்க. இப்படி கலப்பே இல்லாத பரிசுத்தமான இரிடியம்கிறது இந்த உலகத்துல



டுங்குஸ்காவில் விண்கல் விழுந்த இடத்தின் பாதிப்புகள்!

இல்லவே இல்லையாம். அப்படின்னா இது எங்கிருந்து வந்தது? எல்லாம் அந்த 160 அடி அகலமுள்ள வெளிகிரகத்து விண்கல் கொண்டு வந்து சேர்த்துனதுதானாம். இதெல்லாம் கற்பனையில்ல. கதையில்ல. ஹாலிவுட் ரீலும் இல்ல. அப்பட்டமான

நிஜங்கள்தான்:

சமீபத்துல நம்ம உலகத்தைப் பத்தி ஒரு அதிசயமான ரகசியத்தை விஞ்ஞானிங்க இப்ப கண்டுபிடிச்சிருக்காங்க.

செவ்வாய் கிரகம் நம்ம பூமிக்கு ரொம்ப பக்கத்துல இருக்குது! ரொம்ப காலத்துக்கு முன்னால 23 மில்லியன் வருஷங்களுக்கு முன்னால செவ்வாய் கிரகத்துலே இருந்து நம்ம பூமியிலே ஒரு பெரிய விண்கல் விழுந்திருக்கு. விழுந்த இடம், கனடா நாட்டிலுள்ள டெவான் தீவு. அந்த இடத்துல அந்த விண்கல் விழுந்ததால பதினைந்து மைல் நீளத்துக்கு ஒரு பெரிய பள்ளமே ஏற்பட்டதாம். ஆனா அந்தக் கல் விழுந்த உஷ்ணத்துனாலயும் வேகத்துனாலயும்




கனடா நாட்டில் செவ்வாய் கிரகத்து விண்கல் விழுந்த இடத்தை இந்த வரைபடம் சுட்டிக் காட்டுகிறது.



செவ்வாய் கிரகத்திலிருந்து பூமியை நோக்கி விரைந்து வந்து கொண்டிருக்கும் ஒரு விண்கல்.

பூமிக்குள்ள இருக்கிற கிரானைட் பாறைகளும், லார்வா நெருப்புக் குழம்பும் அந்த ஓட்டையை அடைச்சுட்டு, சின்னச் சின்ன குன்று மாதிரி உயர்ந்து இருக்கிறதை இப்பக் கண்டுபிடிச் சிருக்காங்க. ஆள் இல்லாத ரோபோ விமானங்கள்ல பறந்து இதைப் பத்திய அதிசயமான தகவல்களையெல்லாம் வெளியிட்டிருக்காங்க.

விண்கல் விழுந்த அந்த இடத்துல உற்பத்தியான ஏரிகள், பக்கம் பக்கமா இருந்தாலும், பலவிதமான நிறங்கள்ல இருக்குதாம்.

அதே மாதிரி ஒரு விண்கல் நம்ம பூமி மேல இப்ப விழலாம்னு நாஸ்டர்டாம்ஸோட கவிதைகள்



கனடா நாட்டின் டெவான் தீவின் மேல்
அந்த விண்கல் விழுகிறது.



செவ்வாய் கிரகத்து விண்கல் விழுந்த பள்ளத்தை இந்த ஆளில்லாத ரோபோ விமானம் மூலம் இப்போது ஆராய்ச்சியாளர்கள் வெகு துரிதமாக கண்காணித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அறிவுறுத்துது. அந்த விண்கல் விழறதுக்கு முன்னாடி சில அறிகுறிகள் வானத்துல தெரியும்னும் நாஸ்டர்டாம்ஸ் விவரிச்சிருக்கார். அது என்னன்னா,

இந்த சூரியகிரகணம் இருக்குதே அது



விண்கல் விழுந்த பிறகு அந்தப் பகுதி
நிர்மூலமாக்கப்பட்டிருப்பதை இது சித்தரிக்கிறது.

அப்பப்ப உலகத்தின் பல பாகங்கள்ல நடந்துட்டுதான் இருக்குது. அதுல சில இடங்கள்ல முழு சூரிய கிரகணம் நடக்கும். சுத்தமா சூரியனே தெரியாது. அதேசமயம் இதுமாதிரி முழு சூரிய கிரகணம் ஒரு இடத்துல தெரிஞ்சுதுன்னு வச்சுக்குங்க. அதுக்கப்புறம் 410



அந்த ரோபோ விமானம் எடுத்த
விண்கல் பள்ளத்தின் ஒரு
ஒரிஜினல் போட்டோ.



**கனடா நாட்டின் டெவான் தீவில் விண்கல் விழுந்த பகுதியில் இப்பொழுது சில விசித்திர மேடுகள் உருவாகியுள்ளதையும் விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.**

வருஷம் வரைக்கும் அதே இடத்துல இந்த முழு சூரிய கிரகணம் ஏற்படாது. ஆனா, ரெண்டாவது தடவையா அப்படி ஒரு முழு சூரிய கிரகணம் இந்த 99 ஆகஸ்ட் 11ந் தேதி நடக்கும்னு விஞ்ஞானிகள் ஒப்புக்கறாங்க.



செவ்வாய் கிரகத்தின் விண்கல் பூமியில் விழுந்த இடத்தில் விதவிதமான வண்ணங்களில் ஏரிகள் உற்பத்தியாகி இருப்பதையும் இப்பொழுது ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

இந்த சூரிய கிரகணம் ஏற்பட்டு வானத்துல சூரியன் ஒட்டுமொத்தமா கொஞ்ச நேரத்துக்கு மறைஞ்சு போகும். அந்த நேரத்துலதான் திடீர்னு ஒரு வால் நட்சத்திரத்தோட ஒளி நம்ம கண்ணுக்கு தெரிய

ஆரம்பிக்குமாம். இப்படி சொல்றது நாஸ்டார்டாம்ஸ்தான்!

முழு சூரிய கிரகணம் ஆகஸ்ட் 11-ம் தேதி நடக்கறதை மட்டுந்தான் விஞ்ஞானம் கணிச்சிருக்கு. அந்த நேரத்துல அந்த இருட்டுல, வால் நட்சத்திரத்தோட ஒளி தெரியும்னு நாஸ்டார்டாம்ஸ் கவிதைகள் சொல்லுது. இதைப்பத்தி விஞ்ஞானிகள் எதுவும் சொல்லலேங்கறத வாசகர்கள் ஞாபகத்துல வெச்சுக்கணும். மேற்கொண்டு நாஸ்டார்டாம்ஸ் அந்த வால்நட்சத்திரத்தைப் பத்தி விவரிக்கிறதைப் பார்ப்போம்.

அந்த வால் நட்சத்திரத்தோட ஒளி, சூரிய கிரகணம் விலகுன உடனே கண்ணுக்குத் தெரியாம மறைஞ்சிடுமாம். ஏன்னா, சூரியனோட பிரகாசத்துல அது கண்ணுக்குப் புலப்படாம போறதுக்கு வாய்ப்பு இருக்கு. அதே சமயத்துல இந்த சூரிய கிரகணம் முடிஞ்சதுக்கு அப்புறம் கொஞ்ச நாள்ல சூரியன் பிரகாசிச்சுக்கிட்டிருக்கப்பவே, திடீர்னு அந்த வால் நட்சத்திரத்தோட வெளிச்சத்தை உலகத்துல உள்ள எல்லா மக்களும் பார்க்க முடியுமாம். இதுக்கு என்ன அர்த்தம்னா, அந்த வால் நட்சத்திரம் முந்தி இருந்ததைக் காட்டிலும் நம்ம பூமிக்கு பக்கத்துல வந்திருச்சுங்கறதுதான். இது மாதிரி வால் நட்சத்திரங்கள் வெளிச்சம் போட்டுட்டு வானத்துல தெரிஞ்சதுக்கு உண்டான ஆதாரங்களும் இல்லாம இல்லை. 1843-ஆம் வருஷம் வானத்துல திடீர்னு ஒரு வால் நட்சத்திரம் தெரிஞ்சது. அதோட வாலின் நீளம்

200 கோடி மைல் நீளம் இருக்கும்னு விஞ்ஞானிகள் யூகிக்கிறாங்க. இந்த வெளிச்சத்துல ராத்திரி நேரத்துல கூட நியூஸ் பேப்பர் படிச்சாங்களாம். அதே மாதிரி



**1983ம் ஆண்டு வானத்தில் தோன்றிய இந்த வால் நட்சத்திரத்தை டெலஸ்கோப்பின் உதவியின்றி சாதாரண காமிராவில் எடுத்த புகைப்படம் இது! அந்த அளவுக்கு இது வெறும் கண்ணாலே பார்க்க முடிந்தது. இருந்தாலும் இது எவ்வளவு தூரத்தில் இருந்தது தெரியுமா? நமது பூமிக்கும் சந்திரனுக்கும் இடைப்பட்ட தூரத்தைப் போல பன்னிரெண்டு மடங்கு தள்ளி!**

---

*1910*- அதாவது, இந்த நூற்றாண்டு ஆரம்பத்துலயும் ஒரு வால் நட்சத்திரம் உதயமாச்சு. அதை கிரேட் டே லைட் காமெட்'ன்னு வர்ணிக்கிறாங்க!

அதோட வால் நீளம் ஆகாயத்துல சரிபாதி



பல கோடி மைல் நீளமுள்ள வாலுடன் வானத்தில்
பயணப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு வால் நட்சத்திரம்!

அளவுக்கு தெரிஞ்சதாம். இப்ப அதே மாதிரி ஒரு வால் நட்சத்திரம் வானத்துல இந்த ஆகஸ்ட் 11 முழு சூரிய கிரகணத்தப்பவும் தெரியும்னு நாஸ்டர்டாம்ஸ் கவிதைகள் சொல்லுது. சூரிய கிரகணத்துக்கு பின்னால கொஞ்ச வாரம் கழிச்சு இந்த வால் நட்சத்திரம் இன்னொரு சூரியனைப் போல பிரகாசமா தெரியுமாம். ராத்திரி பகலா இதோட வெளிச்சம் வானத்துல ஏழு நாள் வரைக்கும் இருக்கும்னும் நாஸ்டர்டாம்ஸ் பயமுறுத்துறார். இப்படித் தெரியிற அதோட வால்

பகுதியில என்ன என்ன இருக்கும்? அண்டவெளியில் உள்ள எத்தனையோ சமாச்சாரங்களெல்லாம் இதுல இருக்கும்னு விஞ்ஞானம் சொல்லுது. அதுல பெரிய பெரிய மலையளவுக்கு இருக்கற விண்கற்களும் இருக்கலாம். ஒருவேளை நாஸ்டர்டாம்ஸ் சொல்ற மாதிரி அப்படியொரு வால் நட்சத்திரம் உதயமாச்சுன்னா அதோட விளைவுகள் என்ன ஆகும்? அதைப் பத்தியும் ஆராய்ந்து பார்த்திருக்காங்க.

இந்த வால் நட்சத்திரம் நம்ம சூரிய மண்டலத்துக்கு கொஞ்சம் பக்கமா வந்துட்டு அதோட போக்குல போயிடும். அந்த வால் நட்சத்திரம் நம்ம சூரிய குடும்பத்தையோ, இல்ல நம்ம பூமியையோ எந்த வகையிலயும் நேரடியா பாதிக்காது. ஆனா இந்த வால் நட்சத்திரத்துக்கு பின்னால, கோடிக்கணக்கான மைல் நீளத்துக்கு வர்ற வால் பகுதிதான் நமக்குப் பிரச்சினை. பூமியோட சுழல் பாதை இந்த வால் பகுதிக்குள்ள போகும். அந்த சமயத்துல அந்த வால் பகுதியில இருக்கிற ஒரு பெரிய விண்கல் நாஸ்டர்டாம்ஸ் சொன்ன ஆப்பிரிக்கா, ஐரோப்பா பிளேட் மேல விழலாம்.

இதைத்தான் நாஸ்டர்டாம்ஸ் வானத்துல இருந்து வர்ற பயங்கரங்களோட அரசன்னு வர்ணிச்சிருக்கார்.

பல லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முன்னால இந்த பூமியில மனுஷன்கிற இனமே தோன்றல. அப்போ, ஸ்பீல்பெர்க் படத்துல வர்ற மாதிரி பெரிய பெரிய டைனோசர்கள்தான் உலகம் பூராவும் உலாத்திட்டிருந்தது. ஆனா ராட்சசத்தனமான அந்த டைனோசர்கள் திடீர்னு ஒரு காலகட்டத்துல வாரிசே இல்லாம அழிஞ்சு போச்சுன்னு விஞ்ஞானிகள் கண்டுபிடிச்சிருக்காங்க. அதுக்கு என்ன காரணம்?



வானத்துல இருந்து பெரிய பெரிய பாறைகளா, மலைகளா இந்த விண்கற்கள் மழை மாதிரி பொழிஞ்சதாம். அதனாலதான் அந்த டைனோசர் இனமே வாரிசில்லாம அழிஞ்சி போச்சுன்னும் ஆராய்ச்சியாளர்கள் சொல்றாங்க. இதெல்லாம் பல லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முந்தின சமாச்சாரம். இப்ப சமீபத்துல கூட பெரிய பெரிய மலைகளா விண்கற்கள் நம்ம சூரிய குடும்பத்துல இருக்கிற ஜூபிடர்ங்கிற கிரகத்து மேல விழுந்த செய்திகளை நீங்க பேப்பர்ல படிச்சிருக்கலாம். 94ம் வருஷம் அது நடந்தது. ஜூபிடர்ல விழுந்த அந்த விண்கற்கள் நம்ம உலகத்தையும் பாதிக்குமோன்னு கூட பயப்பட்டோம்.

ஆனா, விஞ்ஞானிகள் அப்படி எதுவும் நிகழாதுன்னு முன்கூட்டியே தெரிவிச்சாங்க. அதேசமயம் அந்த ஜூபிடர்ல விழுந்த விண்கற்கள் அந்த கிரகத்துல எக்கச்சக்கமான பாதிப்புகளை ஏற்படுத்தியிருச்சுன்னும் கண்டுபிடிச்சிருக்காங்க. ஜூபிடர்ல விழுந்த ஒவ்வொரு விண்கல்லும் உலகத்தை விடப் பெரிய சைசாம்!

ஒருவேளை நாஸ்டர்டாம்ஸ் சொல்றமாதிரி அப்படி ஒரு விண்கல் விழுந்தா என்னென்ன பாதிப்புகள் நிகழும்னு இன்னைக்கு இருக்கற விஞ்ஞானிகள் ஆராய்ந்து சொல்லியிருக்காங்க. அதைப்பத்தி இனி பார்ப்போம்.

விழப்போகும் அந்த விண்கல்லின் விட்டம் கால் மைல் அளவுக்கு இருக்கும். அது ஒரு செகண்டுக்கு அறுபதுல கிலோ மீட்டர் வேகத்தில் பூமியை வந்து தாக்கும். விண்கல் விழுந்த இடத்திலிருந்து அந்த கடல் பகுதியே தீப்பற்றி எரிய ஆரம்பிக்கும். அந்தத் தீ மேலே உயர்ந்து உயர்ந்து அட்மாஸ்பியர்ன்னு சொல்லக்கூடிய வானத்தில உள்ள காற்று மண்டலத்தையும் தொட்டுவிடும். அதுக்குப் பிறகு அந்தத் தீ நாலாதிசைகளிலும் பரவ ஆரம்பிக்கும். விண்கல் விழுந்த இடத்தில் கணக்கிட முடியாத உஷ்ணம் பரவுறதால சில மோசமான சூறாவளி, புயல் ஆபத்துக்களும் நிச்சயம் ஏற்படும். எந்த இடத்தில் உஷ்ணம் அதிகமாகிறதோ அந்த இடத்தை நோக்கி அதைவிட குறைவா உஷ்ணம் உள்ள காற்று விரைவாக வந்து மோதும். இது ஒரு விஞ்ஞான நியதி.

இந்த அடிப்படையில்தான் கடல் பகுதியில டிப்ரஷன், அழுத்தம் உஷ்ணத்தின் காரணமாக ஏற்படுவதும் அந்த டிப்ரஷனை நோக்கி மற்ற

பகுதிகளிலிருந்து விரைவா காற்று வருவதைத்தான் புயல் என்றும் குறிப்பிடறோம். இந்த புயலோடு சேர்ந்து வருவதுதான் மழை போன்ற விவகாரங்களெல்லாம். ஆனா, இப்ப விண்கல் விழுந்ததாலே ஏற்பட்டிருக்கிற டிப்ரஷனை இந்த புயல் மழை டிப்ரஷனோட ஒப்பிடவே முடியாது. சாதாரணமா உருவாகறத ஸ்ட்ராம், அரிக்கேன் அப்படின்னு சொல்வாங்க. ஆனா, விண்கல் விழுந்ததுக்கப்புறம் **ஹைப்பர் கேன்** அப்படிங்கற சுழல்காற்று உருவாகுமாம்.

சாதாரண ஸ்ட்ராம், அரிக்கேன் இதெல்லாம் நூறு, நூத்தி இருபது மைல் வேகத்துல வீசும். ஆனா, ஹைப்பர் கேன் ஸ்பீடு *500* மைலயும் தாண்டிடுமாம். இந்த அளவு சுத்திச் சுத்தி அடிக்கற அந்த காத்து ஆகாயத்துல அட்மாஸ்பியர் உயரமான முப்பத்தஞ்சு மைலுக்கும் மேல தாண்டிப் போயிடும்.



இப்போ இந்த ஹைப்பர் கேன் ஆரம்பிச்சது விண்கல் விழுந்த இடமான கடல்பகுதிதான். அங்கிருந்து அந்த ஹைப்பர்கேன் ஆகாசத்தை தொட்டு உயர்றப்போ அது என்ன செய்யும்? கடல்ல இருக்கிற உப்பு, கால்சியம், குளோரின், தண்ணீர் இதெல்லாத்தையும் அந்த பயங்கர காத்து, தூக்கிட்டுப் போய் அந்த அட்மாஸ்பியர் உயரத்தில விசிறிவிடும். அதனால நம்ம உலகத்துக்கே கவச மண்டலமா இருக்கிற ஓசோன்கிற லேயரும் ஒட்டுமொத்தமா பாதிக்கப்பட்டு விடும்.

அந்த ஓசோன் கவச மண்டலம் இல்லேன்னா அந்த நிமிஷத்திலிருந்து சூரியன்கிட்டேருந்து வர்ற அல்ட்ரா வைலட் கதிர்களெல்லாம் இந்த பூமியையும், மனிதர்களையும் நேரடியா தாக்கும். இதுவரைக்கும் அந்த அல்ட்ரா வைலட் கதிர்களை வடிகட்டி அனுப்பின கவச மண்டலம் இல்லாததால அந்த அல்ட்ரா வைலட் கதிர்கள் மனிதர்களுக்கு சொல்ல முடியாத துயரைக் குடுக்கும். பலவிதமான தோல் வியாதிகளை, கேன்சர்களை எல்லாம் ஏற்படுத்தும்.

அதேமாதிரி நாஸ்டர்டாம்ஸ் சொல்றமாதிரி கால் மைல் விட்டமுள்ள ஒரு விண்கல் கடல்ல ஒரு தடவை விழுந்தா போதும். அதனால இந்த ஹைப்பர் கேன்ங்கற பயங்கர சூறாவளி காற்றுகள் விட்டுவிட்டு அந்த கடல் பகுதிகள்ல உருவாயிட்டேருக்கும். விண்கல் விழுந்த சூடு தணியற வரைக்கும் இந்த ஹைப்பர்கேன் சூறாவளிகள் மாசக்கணக்குல ஒண்ணுக்கு பின்னால ஒண்ணா புறப்பட்டு வந்துட்டே இருக்கும்.

500 மைல் வேகத்துல சுழன்று அடிக்கிற இந்த சூறாவளி காற்றுகள் விண்கல் விழுந்த இடத்துல உருவான நெருப்பையும் தீயையும் விசிறி அடிச்சிட்டே





**Earthquaking fire from the center of the earth will make the <u>new city</u> tremble.**

இதில் நியூ சிட்டி என்று நாஸ்டர்டாம்ஸ் குறிப்பிடுவது நியூயார்க் நகரம்தான். அவர் கணிப்புப்படியே செயின்ட் ஹெலன்ஸ் 1930ல் எரிமலைக் குழம்பை வாரியிறைத்து வெடித்தது. அதன் அதிர்வுகள் நியூயார்க் சிட்டியையும் நடுநடுங்க வைத்தது.

வரும்.

அதேமாதிரி விண்கல் விழுந்த இடத்துல இன்னும் சில பயங்கரங்கள் நிகழுமாம். முதல்ல அந்தக் கல்லு கடல்ல விழுந்து கடலோட தரைமட்டத்துல போய் மோதும். இதனால அந்தப் பகுதியில இருக்கிற ஐரோப்பா, ஆப்பிரிக்கா பிளேட்டு உடைஞ்சு வாய் பிளக்கும்.

இப்பவும் இந்த பூமிக்கு நடுவுல அதாவது கடலுக்கும் அடியில நெருப்புக் குழம்பு இன்னும் ஆறாம சூரியன் மாதிரியே கொதிச்சிட்டிருக்கிற[illegible] விஞ்ஞானம் படிச்சவங்களுக்குத் தெரியும். அந்த நெருப்பு குழம்பெல்லாம் மேல வராதபடிதான் இந்த பிளேட்டுகள் எல்லாம் கைகோர்த்து நின்னுட்டிருக்கு. இப்ப இந்த பிளேட்டு உடைஞ்சவுடனே அதுக்கு கீழே முட்டி மோதிட்டு நிக்கற லாவாங்கற நெருப்புக் குழம்பும் பீறிட்டு வெளியே வரும். அதனால திடீர்னு பசிபிக் கடல்ல ஏராளமான எரிமலைகள் நெருப்பையும், சாம்பலையும் கக்க ஆரம்பிக்கும். ஒரு கால் மைல் விட்டமுள்ள ஒரு கல்லு கடல்ல விழுந்தா அதனால பிளேட்டே உடையுமா? அப்படியெல்லாம் நாம யோசிக்கலாம்.

விஞ்ஞானிகளும் ஆராய்ச்சியாளர்களும் இதைப்பத்தி ஆராய்ந்தாங்க. அதுல இருந்து வந்த தகவலும் நம்மளை பயமுறுத்தற மாதிரி இருக்கு. மத்த பிளேட்டுகளை காட்டிலும் இந்த ஐரோப்பா, ஆப்பிரிக்கா பிளேட்டு உறுதியில்லாம இருக்காம்.

அதேமாதிரி இந்த விண்கல் ஒருவேளை நாஸ்டர்டாம்ஸ் சொல்ற மாதிரி விழுந்ததுன்னா அதனால அந்த ஒரு பிளேட்டு உடையறதோடு நிக்காது.

விண்கல் மோதின வேகத்துல உடைஞ்சு பிரிஞ்சு போன அந்த பிளேட்டு ஆடி அசைஞ்சுட்டே இருக்கும். நிலையா இருந்த அந்த பிளேட்டு ரெண்டா பிரிஞ்சு நகரவும் ஆரம்பிக்கும். அது உலகத்தோட மத்த பகுதியில் உள்ள பிளேட்டுகளையும் அசையச் செய்யும். ஆட்டம் காணச் செய்யும். இந்த அதிர்வுகளால ஒட்டுமொத்த அட்லாண்டிக் சமுத்திர பகுதிகளெல்லாம் நிர்மூலமா போயிடலாம். அதாவது, அந்த இடத்தில கடலே இல்லாம புதுசு புதுசா பூமிக்குள்ள இருந்து மேலே வந்த கிரானைட் மலைகள் கூட நிமிர்ந்து நிக்கலாம்.

இந்தப் பாதிப்புகள் உலகத்தோட மற்ற கடல் பகுதிகள்லயும் நிச்சயம் ஏற்பட்டே தீரும்.

இப்படி சமுத்திரமே கொந்தளிக்க ஆரம்பிக்கறதால என்ன ஏற்படும்?



அதைப் பத்தியும் விஞ்ஞானிகள் கணிச்சிருக்காங்க. கடல்ல திடீர்னு சுனாபிங்கற ராட்சச அலைகள் உற்பத்தியாகும். இந்த ராட்சச அலைகள்

நாலாயிரம் மைல் தூரத்தை நாலு மணி நேரத்துல தாண்டிடும். அதுக்கப்புறம் சுவர் மாதிரி கடல்ல உருவான அந்த சுனாபி அலைகளெல்லாம் எல்லா நாட்டு கடற்கரைகளையும் உடைச்சிட்டு நாம வசிக்கிற பூமிக்குள்ளயும் தாராளமா புறப்பட்டு வந்துடும். ஆரம்பத்துல கடல்ல உருவான இந்த சுனாபியோட உயரம் மூன்றடி, நாலடியா கூட இருக்கலாம். ஆனா, ஒண்ணுக்குப் பின்னால ஒண்ணா இந்த ராட்சத அலைகள் தொடர்ந்து வந்துட்டே இருக்கும். அப்படி வர்ற அலைகளை உயரமான கடற்கரைகள் தடுக்க ஆரம்பிக்கும். இதனால அந்த இடத்துல ஏராளமான கடல் தண்ணீர் தேங்க ஆரம்பிக்கும். இதனால கடல் மட்டம் 30 அடி 40 அடி வரைக்கும் கூட கடற்கரை ஓரங்கள்ல உயர்ந்து போகலாம்.

திடீர்னு 30 அடி 40 அடி உயரத்துக்கு நம்ம குடியிருக்கிற பகுதிகள்ல கடல் தண்ணீர் புகுந்தா என்னாகும்கிறதை நாம கற்பனை செஞ்சுகூட பார்க்க முடியாது. இதோட இந்த சுனாபி அலைகள் இன்னொரு ஆபத்தையும் ஏற்படுத்துமாம்.

ஏற்கனவே அந்த விண்கல் விழுந்த இடத்துல ஹைப்பர்கேன்னால பரவிட்டிருக்கிற நெருப்பையும் இந்த கடல் அலைகளின் காற்று வேகம் இழுத்துட்டு வந்து நம்ம பூமிப்பரப்புல பரவ விட்டுடும்.

இப்படி ஹாலிவுட் சினிமா கிராபிக்ஸை தாண்டி டெரரா வர்ற இந்த சுனாபி அலைகள் இன்னும் என்னென்ன செய்யும்? அதைப்பத்தி கூட ஆராய்ச்சியாளர்கள் கணிச்சிருக்காங்க. பெரும்பாலான எண்ணைக் கிணறுகள் பெட்ரோல் பைப் லைன்கள் எல்லாமே கடற்கரையை ஒட்டியுள்ள துறைமுகங்கள்ல பாதுகாப்பா அமைச்சிருப்பாங்க. ஏன்னா

வெளிநாட்டுல இருந்து கப்பல்ல வர்ற எண்ணெய் சமாச்சாரங்களையெல்லாம் சேகரிச்சு வைக்கிறதுக்கு துறைமுகப் பகுதிதான் பொருத்தமான இடம்.

இப்ப அடிச்சு மோதிட்டு வர்ற அந்த சுனாமி அலைகள் முதல்ல அந்த துறைமுகத்துல இருக்கிற ஆயில் பைப் லைன்களையும் எண்ணெய் கிணறுகளையும் உடைச்சு எறிஞ்சிடும். அதனால அளவுக்கு அதிகமான பெட்ரோலிய விவகாரங்களெல்லாம் தண்ணிக்கு மேல மிதக்க



ஆரம்பிக்கும். தப்பித் தவறி ஒரு தீக்குச்சியை உரசிப் போட்டாக் கூட உடனே அந்த கடல் தண்ணீயே பத்திக்கிட்டு எரிய ஆரம்பிக்கும்.

இப்ப விண்கல் விழுந்த இடத்துல உற்பத்தியான நெருப்பை ஹரிக்கேன்களெல்லாம் நாலாபக்கமும்

ஐநூறு மைல் வேகத்துல விசிறியடிச்சிட்டிருக்கும். அப்ப என்ன ஆகும்?

அந்த நெருப்பு கடல் தண்ணி மேல மிதந்திட்டிருக்கிற பெட்ரோலியத்துல உடனே பத்திக்கும். எல்.ஐ.சி. உயரத்துக்கு எழும்பி வர்ற ஒரு கடல் அலை அதோட தலையில தீப்பிடிச்சு எரிஞ்சுட்டு வந்தா எப்படி இருக்கும்னு யோசனை பண்ணிப் பாருங்க. - அடுத்து.

ஒரு இடத்துல நாஸ்டர்டாம்ஸ் தன்னோட கவிதைகள்ல இந்த ராட்சச அலைகள் நார்த் போல் ஐஸ் மலைகளையும் தாண்டி தடைபடாம அடுத்துள்ள பசிபிக் கடல்ல போய்ட்டே இருக்கும்னு சூசகமா குறிப்பிட்டிருக்காரு. இதை மேலோட்டமா பார்த்தா ரொம்ப பைத்தியக்காரத்தனமா கூட தெரியலாம். ஏன்னா நார்த்போல் ஐஸ் மலைகள் ஆயிரக்கணக்கான அடி உயரமுள்ளது. கடல்ல புறப்பட்டு வர்ற இந்த சுனாபி அலைகள் அதையும் மீறிய உயரம் இருக்குமா? இருக்கவே முடியாது.

ஆனாலும் நாஸ்டர்டாம்ஸ் குறிப்பா அந்த நார்த்போல் ஐஸ் மலைகளை, சுனாபி அலைகள் தடையின்றி தாண்டிப் போகும்னு எதுக்காக குறிப்பிட்டார். இதைப்பத்தி இன்னைக்கு இருக்கிற விஞ்ஞானிகள் கவனம் செலுத்தினப்பத்தான் ஒரு பெரிய அதிசயம் வெளிப்பட்டது.

வட துருவம்னு சொல்லக்கூடிய இந்த நார்த்போல்ல ஆயிரக்கணக்கான அடி உயரத்துல பனி மலைகள் காலங்காலமா நின்னுட்டுதான் இருக்கு. ஆனா இந்த பனிமலைகளுக்கு கீழே தரைப்பகுதியே இல்லே. அதாவது இந்த நார்த்போல் ஐஸ் மலைகளெல்லாம்

அந்தப் பகுதியில் உள்ள கடல்ல மிதந்திட்டிருக்கிற ஐஸ் மலைகள்தான். இருந்தாலும் அளவுக்கு அதிகமான குளிர் அங்கே தொடர்ந்து இருப்பதால இந்த ஐஸ் மலைகள் நகரவும் செய்யாது. உருகவும் செய்யாது. அதோட இந்த ஐஸ் மலைகளின் அடிவாரப் பகுதிகளெல்லாம் கனடா, ரஷ்யாவின் சைபீரியா, கிரீன்லாந்து, நார்வே, டென்மார்க் இப்படிப்பட்ட நாடுகளின் தரைப்பகுதியில ஆரம்பிச்சு, அதையே ஒரு பிடிமானமாவும் புடிச்சிட்டிருக்கு.

இதெல்லாம் இந்த இருபதாம் நூற்றாண்டு விஞ்ஞானிகள் கண்டுபிடிச்ச உண்மைகள். ஆனா, 400 வருஷத்துக்கு முன்னால வாழ்ந்த நம்மாளு, நாஸ்டர்டாம்ஸ் இந்த விஞ்ஞான உண்மைகளை ஒரு தீர்க்கதரிசனமா சொன்னது பெரிய அதிசயம்தா! அதனால விண்கல் விழுந்ததால உற்பத்தியான சுனாபி அலைகள் நார்த்போல் மலை உயரத்தை தாண்டி அடுத்துள்ள பசிபிக் சமுத்திரத்துக்கு போகணும்கிறது இல்லே. அந்த மலைகளுக்கு கீழே கடல்தான் இருக்கு. எனவே சுனாபி அலைகள் நார்த்போல் பகுதியில இப்ப இருக்கிற மலைகளுக்கு கீழே இருக்கிற கடல் வழியாவே பயணப்பட்டு அடுத்துள்ள பசிபிக் சமுத்திரத்தை அடைஞ்சிடும்ன்னு ஆராய்ச்சிகள் நிரூபிக்குது.

இவ்வளவு அதிசயமான அந்த ரகசியம் நாஸ்டர்டாம்ஸுக்கு எப்படித் தெரிஞ்சுதுன்னு நம்மால சொல்ல முடியலை. இருந்தாலும் தன்னோட கவிதை வரிகள்ல சுனாபிங்கற அலைகள் நார்த்போல் ஐஸ் மலைகளால் தடைபடுத்தப்படாமல் பசிபிக் கடலில் பயணப்படும்னு சொல்லியிருக்கார்.

நாஸ்டர்டாம்ஸ் சொல்றமாதிரி ஒரு விண்கல் இந்த

பூமியில விழலாம். அல்லது விழாமலும் போகலாம். ஆனால் அந்த விண்கல் பாதிப்பால் சுனாபி அலைகள் உற்பத்தியாகும். அது நார்த்போல் ஐஸ் மலைகளால் தடைபடுத்தாமல் பசிபிக்கில் பயணப்படும்னு சொன்ன அந்த கணிப்புக்காக விஞ்ஞானிகள் எல்லாம் கூட இந்த நாஸ்டர்டாம்ஸ் ஒரு மாமேதைன்னு ஒத்துக்கறாங்க.

வருங்காலத்தைப் பத்தி நிறைய பேர் கணிச்சிருக்காங்க. எழுதி வச்சிருக்காங்க. ஆனா, அதெல்லாம் ஒரு ஜோசியம் மாதிரி இருக்கும்.



விஞ்ஞான உண்மைகளுக்கும் அதுக்கும் எள்ளவும் சம்பந்தம் இருக்காது. ஆனா, இந்த நாஸ்டர்டாம்ஸ் கணிப்புகளுக்கும் விஞ்ஞான உண்மைகளுக்கும் ஒரு நெருக்கமான தொடர்பு இருக்கிறத நாம புரிஞ்சுக்க முடியுது. அதேமாதிரி காலத்தை கணிச்சு சொன்ன எந்த ஒரு நபரையும் இந்த உலகம் ரெண்டு மூணு நூற்றாண்டுகளா ஞாபகப்படுத்திட்டே இருந்ததில்லே.

ஆனா, நானூறு வருஷம் தாண்டியும் இந்த நாஸ்டர்டாம்ஸ் ஒருத்தரைத்தான் இன்னைக்கும் உலகம்

விமர்சனம் பண்ணி மறக்காம அவர் பேரை ஞாபகத்துலயும் வச்சிட்டிருக்கு.

அடுத்து இந்த நாஸ்டர்டாம்ஸ் சொல்ற விண்கல் எப்ப விழும்?

அதைப்பத்தி நாஸ்டர்டாம்ஸ் தன்னோட 1) Century 10, Quartrain 72 ல குறிப்பிட்டுள்ள பிரெஞ்ச் மொழி கவிதையின் ஆங்கில மொழிபெயர்ப்பு

The year 1999,
the seventh month
from the sky will come
A great King of Terror

அப்படின்னு குறிப்பிட்டிருக்காரு. இதுல 7வது மாசம்னு ஆங்கிலத்துல மொழி பெயர்த்திருந்தாலும் நாஸ்டர்டாம்ஸ் ஒரிஜினல் கவிதையில **செப்ட்** அப்படின்னுதான் குறிப்பிட்டிருக்காரு. அந்த ஒரிஜினல் கவிதையும் கீழே கொடுத்திருக்கோம்.

*L'an mil neuf cent nonante*
*neuf* ***sept*** *mois,*
*Du ciel viendra un grand*
*Roi D'effrayeur:*

இந்த பிரெஞ்ச் கவிதையை மொழி பெயர்த்தவங்க ஏழாவது மாசமான ஜூலைய குறிப்பிட்டிருக்காங்க. நாஸ்டர்டாம்ஸ் *sept* ன்னு குறிச்சதுக்கு பிரெஞ்ச் மொழியில *sept* ன்னா ஏழாவது மாசம்னு ஒரு அர்த்தம் இருக்கு. அதை வச்சுத்தான் ஏழாவது மாசம்னு மொழி பெயர்த்திருக்காங்க. ஆனா நாஸ்டர்டாம்ஸ் குறிப்பிட்ட *sept* ங்கறது ஒன்பதாவது மாசமான செப்டம்பர்தாங்கிறது சில ஆராய்ச்சியாளர் முடிவு. அதன்படி பார்த்தா இந்த விண்கல் ஆபத்து செப்டம்பர்

மாசத்துல ஏற்படலாம்னு தோணுது.

அதே மாதிரி ஃப்ரம் திஸ் ஸ்கை வில் கம் ஏ கிரேட் கிங் ஆஃப் டெர்ரர் அப்படிங்கறத வச்சு செப்டம்பர் மாசத்துல உலகமே அழியற மாதிரி ஒரு பெரிய யுத்தம் வரும்னும் விமர்சிக்கறாங்க. அப்படி ஒரு உலகயுத்தம் வந்ததுன்னா அணு ஆயுதமெல்லாம் பெருகின இந்த நாள்ல இனி காலாட்படை, தேர்ப்படைன்னு ஆளாளுக்கு மோதற நிலைமை இருக்காது. எல்லாம் ஏவுகணைகள்தான். அது ஒண்ணோட ஒண்ணு மோதற இடமும் வானம்தான். அதனால வானத்துல இருந்து கிங் ஆஃப் டெரர் வரும்னு நாஸ்டர்டாம்ஸ் சொன்னது இந்த இருபதாம் நூற்றாண்டுல வரப் போற மூணாவது உலகப் போர்தான்னு சிலர் கணிக்கிறாங்க. ஆனா, அப்படி ஒரு அணு ஆயுதப் போர் வந்ததுன்னு வச்சுக்கங்க. அது ஒரு ரெண்டு மணி நேரத்துக்குள்ள உலகம் பூராத்தையும் உண்டு இல்லைன்னு ஆக்கிடும். அணு ஆயுதப் போர் வந்ததுன்னா பழைய யுத்தங்கள்



மாதிரி மாசக்கணக்கெல்லாம் தேவையே இல்லை.

அந்த அளவுக்கு உலகம் பூராத்தையும் சில மணி நேரத்துல அழிக்கிற அளவுக்கு இன்னைக்கு குட்டிக்குட்டி நாடுகள்ல கூட பயங்கரமான இலக்கு பார்த்து அடிக்கிற ஏவுகணைகளெல்லாம் விரல் நுனியில வச்சுட்டிருக்காங்க.

இந்த இடத்துலயும் நாம ஒண்ணை யோசிச்சுப் பார்க்க வேண்டியிருக்கு. அணு ஆயுதத் தாக்குதல் மூலமா மூணாவது உலகப் போர் வந்ததுன்னா அதோட பாதிப்புகள் உலகம் பூராவும்தான் இருக்கும். குறிப்பா அது ஆப்பிரிக்கா, ஐரோப்பா பிளேட்டுகள்ல ஆரம்பிக்கும்னு சொல்ல முடியாது. ஆனா, அந்த பிளேட்டுகள் உள்ள சுசா, சியன்னா, போயிட்டா, ஹெரிட்ரியா இந்த நாலு ஊர் பேரையும் நாஸ்டர்டாம்ஸ் குறிப்பா சொன்னதுக்கு என்ன காரணமா இருக்கும்?

ஆக, அந்தக் குறிப்பிட்ட இடத்துல ஏதோ ஒரு பாதிப்பு ஏற்படணும். அதுக்குத் தகுந்த மாதிரி இந்த ஒன்பதாவது மாசத்துல நாஸ்டர்டாம்ஸ் குறிப்பிட்ட மாதிரியே முழு சூரிய கிரகணமும் 410 வருஷத்துக்கப்புறம் ஏற்படுது. அந்த நேரத்துல சூரியனை விட பிரகாசமா தெரியற ஒரு வால் நட்சத்திரம் உருவாகவும் வாய்ப்பிருக்கு. அந்த நட்சத்திரத்தோட வால் பகுதியில வர்ற விண்கல் பூமியைத் தாக்கவும் வாய்ப்பிருக்குன்னு சில ஆராய்ச்சியாளர்கள் நினைக்கறாங்க.

இதெல்லாம் விஞ்ஞானத்தோட ஒட்டிய உண்மைகள். எனவேதான் ஒன்பதாவது மாசத்துல உலக யுத்தம் வரும்கிறதை விட, இந்த உலகத்துக்கு விண்கல்



முழு சூரிய கிரகணம் ஏற்படுவதை இந்தப் படம் சித்தரிக்கிறது!

ஆபத்தால பேரழிவு ஏற்படலாம்னு நம்பத் தோணுது. அதேமாதிரி நாஸ்டர்டாம்ஸோட கவிதைகள பொறுமையா அலசிப் பார்த்தா அந்த விண்கல் பாதிப்புகளான சுனாபி அலைகள், ஹைப்பர்கேன் சுழற்சிகள், எரிமலை வெடிப்புகள் - இந்த வார்த்தைகள் எல்லாம் நாஸ்டர்டாம்ஸ் சூசகமா உபயோகிச்சதுக்கு காரணம் அது விண்கல் ஆபத்தாத்தான் இருக்க முடியும். உலக யுத்தம் அல்லங்கற முடிவுக்கு வர முடியுது.

அணு ஆயுதப் போர்ல பின் விளைவுகள் இந்த அடிப்படையில இருக்கிறதுக்கு வாய்ப்பில்லை. அதோட அணு ஆயுதப் போர் மூன்றாவது உலக யுத்தமா வந்தா அதுக்கப்புறம் இந்த உலகத்துல தப்பிப் பிழைக்கறதுக்கு ஒரு ஆள்கூட இருக்க வாய்ப்பில்லை. ஆனா, நாஸ்டர்டாம்ஸ் இந்த ஒன்பதாவது மாசத்து ஆபத்துக்கப்புறமும் ஏராளமான சிரமங்களோட ஜனங்க தப்பிப் பிழைப்பாங்க. இந்த விண்கல் ஆபத்து பெரும்பாலான பாதிப்புகளை அமெரிக்கா, ஐரோப்பா கண்டங்கள் பக்கத்துலதான் ஏற்படுத்தும். மற்ற பகுதிகள்ல பாதிப்புகள் கொஞ்சம் குறைவா இருக்கறதால அங்கிருக்கிற ஜனங்க ஏராளமான

சிரமங்களோட தப்பிக்கவும் வாய்ப்பிருக்கு. இந்த அர்த்தத்திலயும் நாஸ்டர்டாம்ஸ் தன் கவிதை வரிகள்ல குறிப்பிட்டிருக்காரு.

சரி, இதுக்கப்புறமாவது இந்த உலகம் நிம்மதியா இருக்குமா? நாஸ்டர்டாம்ஸ் என்ன சொல்றாருன்னு பார்ப்போம்.

இந்த செப்டம்பருக்கு அப்புறம்தான் இந்த உலகத்துல மெல்ல மெல்ல உலக யுத்தமும் ஆரம்பிக்குமாம். அந்த உலக யுத்தம் ஒரு வருஷம் ரெண்டு வருஷமல்ல. **இருபத்தி ஐந்து வருஷத்துக்கு** தொடர்ந்து நடக்குமாம். இந்த கணிப்பை அவரோட ஒரிஜினல் கவிதைகள்ல இருந்து பார்த்தப்ப, நமக்கே நம்பறதுக்கு கஷ்டமா இருந்தது. ஏன்னா, அணு ஆயுதங்களெல்லாம் பெருகியிருக்கிற இந்த நாள்ல ஒரு பட்டனை தட்டினாலே ஒரு நாடு பஸ்பமா போயிடும்னு சொல்றாங்க. அப்படி இருக்கிறப்ப இனிமேல வர்ற உலக யுத்தம்கிறது ரெண்டு மூணு



நாள்லயே ஓவராயிடும்.

இந்த நிலையில இருபத்தி அஞ்சு வருஷம் எப்படி யுத்தம் நடக்கும்? நாஸ்டர்டாம்ஸ் ரொம்ப அபத்தமா சொல்லியிருக்காரேன்னு நினைச்சோம். சில ஆராய்ச்சியாளர்கள் இதைப்பத்தி சொன்ன விளக்கங்களை பார்க்கறப்போ நாஸ்டர்டாம்ஸ் ஒரு தீர்க்கதரிசிங்கறதை நாம எல்லாரும் ஒத்துக்கிட்டே ஆகணும். உலக யுத்தம் எப்ப வரும்னு நாஸ்டர்டாம் சொன்னாரு? யோசிக்கணும்.

பயங்கரமான அந்த விண்கல் விழுந்து சமுத்திரப் பிரளயம் ஏற்பட்டு உலகமே தத்தளிச்சிட்டு இருக்கிற நேரத்துல உலக யுத்தம் வரும்னாரு. அந்த ஜலப் பிரளயத்துக்குப் பிறகு வல்லரசு நாடுகள் கூட வலுவிழந்துதான் போயிருக்கும். அணு ஆயுதக் கிடங்குகளெல்லாம் தண்ணிக்குள்ள காணாமப் போயிருக்கும். அணுகுண்டும், ஏவுகணையும் இன்னொரு தடவை அரிச்சுவடியிலிருந்து கண்டுபிடிச்சாத்தான் உண்டு. அந்த அளவுக்கு விழுந்த விண்கல் உலகத்தையே ஒரு புரட்டு புரட்டிடும். இதுக்கப்புறம் வர்ற யுத்தம் எல்லைப்போர்களா இருக்காது. அடுத்த நாட்டை புடிச்சு ஆதிக்கம் செலுத்தணும்கிறதுக்காக இருக்காது. உலகம் பூராவும் சோத்துப் பிரச்னைதான். எனவே எங்கே சாப்பிடறதுக்கு உணவு கிடைக்குதோ அங்கெல்லாம் ஜனங்க அகதிகளா போவாங்க.

எல்லைகளை மீறுவாங்க. இதுதான் இனி வர்ற மூணாவது உலக யுத்தத்துக்கு ஆரம்ப காரணமா இருக்கும். இதுல ஏவுகணைகளும் ராக்கெட்டுகளும் ஒண்ணோட ஒண்ணு மோதாது. ஆள் ஆளுக்கு



எத்தியோபியா நாட்டில் பசி, பட்டினி வறுமையால் மக்கள் எலும்பும் தோலுமாக இருக்கும் பரிதாபக் காட்சி!

அடிச்சுக்குவாங்க. செத்துப் போன மிருகங்களை கூட சாப்பிடற அளவுக்கு உலகம் பூராவும் வறுமை ஏற்படும். அந்த நிலையில மனுஷன் மிருகமாகி தன்னோட பசிக்காக போராடற நிலைமை வரும். அதனாலதான் இந்த பட்டினி யுத்தம் இருபத்தி அஞ்சு வருஷம் வரைக்கும் நீடிக்கிறதுக்கு வாய்ப்பிருக்கு.

இந்த விசயங்களை எல்லாம் நாஸ்டர்டாம்ஸ் விலாவாரியாகவும் தன் கவிதைகள்ல குறிப்பிட்டிருக்கார்.

இதுக்குப் பின்னால பிரான்ஸ் நாட்டுல இருந்து ஒரு சர்வாதிகாரி உதயமாவாராம். அவரை புடிக்குதோ இல்லையோ, இந்த உலகம் பூராவும் அந்த

சர்வாதிகாரிய தங்களோட தலைவரா ஏத்துக்குமாம். இருபத்தி அஞ்சு வருஷமா போராடி களைச்ச உலக ஜனங்க இனி இந்த போராட்டம் நீங்கினாப் போதும்னு அந்த பிரெஞ்சு நாட்டுக்காரரை தலைவரா ஏத்துக்குவாங்களாம்.

இதெல்லாம் நாஸ்டர்டாம்ஸோட கணிப்புகள்தான்.

அதே மாதிரி *99* ஒன்பதாவது மாசத்துல எந்தக் கிழமையில் இந்த விண்கல் பாதிப்பு ஏற்படலாம்கிறதுக்கும் நாஸ்டர்டாம்ஸ் ஒரு க்ளூ கொடுத்திருக்காரு.

அந்த கவிதை வரிகளையும் கீழே கொடுத்திருக்கோம்.

**(13) Century 10, Quatrain 71**
The earth and air will freeze
so much water,
When they will come
for Thursday worship:
That which will be will not ever
be as fair as it was,
From the four parts
they will come to honour it.

இந்தக் கவிதையிலிருந்து ஒரு வியாழக்கிழமை பிரார்த்தனைக்கு உலகம் தயாராகும்ங்கறது புரியுது.

ஆனால், உலகத்தில் எந்த இனமும் இந்த வியாழக்கிழமைகளில் பிரேயர் செய்யறதில்லை. முஸ்லீம்கள் வெள்ளிக்கிழமைகளிலும், யூதர்கள் சனிக்கிழமைகளிலும், கிறிஸ்துவர்கள் ஞாயிற்றுக்கிழமைகளிலும் பிரார்த்தனை செய்யறாங்க. ஆனா, உலகத்தில் எந்தவொரு இனமும் வியாழக்கிழமைகளில் பிரேயர் செய்யறது இல்லே.

அப்படீன்னா இந்த வியாழக்கிழமை பிரார்த்தனைக்கு அர்த்தம் என்னவா இருக்கும்? யுனைடெட் ஸ்டேட்ஸ்ல ஒரு (Thanks Giving Day) தேங்க்ஸ் கிவ்விங் டே என்று ஒரு வியாழக்கிழமை மட்டும் பிரசித்தி பெற்றுள்ளது. இதை வெச்சுப் பார்த்தா, விண்கல் பாதிப்புக்குத் தப்பி, யுனைடெட் ஸ்டேட்ஸ் மட்டும் சகல வசிதிகளுடன் இருக்குமா? அந்த நாட்டை நம்பி மற்ற நாடுகளெல்லாம் அந்த வியாழக்கிழமை பிரார்த்தனைக்கு வருமா? இப்படியொரு அர்த்தம் எடுத்தால் அதுவும் சரிப்பட்டு வரலே! ஏன்னா, இந்த விண்கல் பாதிப்பு நேரடியா அமெரிக்க ஐக்கிய நாடுகளைத்தான் அதிகமா பாதிக்கும்னு நாஸ்டர்டாம்ஸ் கணிப்புகள் சொல்லுது. எனவே இந்த வியாழக்கிழமைக்கும் தேங்க்ஸ் கிவ்விங் டேவான அமெரிக்க வியாழக்கிழமைக்கும் சம்பந்தம் இல்லேன்னு தோணுது.

இதப்பத்தி ஆராய்ச்சியாளர்கள் என்ன சொல்றாங்க?

நாஸ்டர்டாம்ஸ் பாஷையான பிரெஞ்சு மொழியில் ஜூபிடர் கிரகத்திற்கு ஜூடி என்று **வியாழக்கிழமையைத்தான்** குறிப்பிடுவாங்க.

நார்ஸ் என்ற பிரசித்தி பெற்ற பழங்கால இனத்தின் ஒரு கடவுள் பெயர் Thor. அந்த Thor என்ற மூலத்திலிருந்து வந்ததுதான் Thursday.

இந்த Thor என்ற கடவுளுக்கும் அந்த ஜூபிடர் கடவுளுக்கும் ஒரு பொதுவான ஒற்றுமை உண்டு.

இரண்டு கடவுளுமே போருக்குண்டான கடவுள்கள். மேலும் இந்த இரண்டு கடவுள் கையிலும் மின்னலைப் பிடித்து அதை வீசுவதைப் போல சிம்பாலிக்கும் உண்டு.

எனவே விண்கல் ஏதோ ஒரு வியாழக்கிழமையில செப்டம்பர் மாதத்தில் விழ இருப்பதாக நாஸ்டர்டாம்ஸ் கணிப்புகள் தெரிவிக்குது.

வியாழக்கிழமையை உலகம் முழுவதும் பிரார்த்தனை செய்வதற்கும், திரும்பத் திரும்ப ஞாபகத்தில் வைக்குமளவு விண்கல் வியாழக்கிழமையில் விழுவது முக்கியத்துவம் பெறும்னும் ஆராய்ச்சியாளர்கள் சொல்றாங்க.

இந்த அளவுக்கு எதிர்காலத்தைப் பத்தி இந்த நாஸ்டர்டாம்ஸ் ஆணித்தரமாக சொல்றாரே. இதை எப்படி நம்பறது? கடந்த காலத்துல இவர் சொன்ன கணிப்புகள் எல்லாம் அவ்வளவு கரெக்டா நடந்திருக்கா?

பார்ப்போம்!

ஏசுநாதர் யூத இனத்தைச் சேர்ந்தவர். இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற விஞ்ஞானியான ஐன்ஸ்டீன் கூட யூத இனம்தான்!

இப்படி பல துறைகள்ல தலைசிறந்தவர்கள்ல பல பேர் யூத இனத்தைச் சேர்ந்தவங்கன்னு பெருமையா சொல்லிக்குவாங்க.

அந்த வகையில இந்த நாஸ்டர்டாம்ஸூம் யூத இனத்துக்குப் பெருமை சேர்க்கிறார். இவரும் அதே இனத்தைச் சேர்ந்தவர்தான்.

ஒரு நடுத்தரக்குடும்பத்துல பொறந்தாலும், சின்ன வயசிலேயே ரொம்பப் பிரமாதமாப் படிச்சாரு. அந்தக் காலத்திலேயே மருத்துவப் பட்டமெல்லாம் வாங்குனாரு. அந்த சமயத்துல பிரான்ஸ் நாட்டுல காலரா, பிளேக் நோய்களுக்கு மருந்தே கிடையாது.



முதல் படத்தில் கட்டம் கட்டிய பகுதிக்குள் ஏசுநாதர் சிலை இருப்பதை உற்றுப் பார்த்தால் தெரியும். இந்த பெரு நாட்டில் 1970ம் ஆண்டு மிகப்பெரிய பூகம்பம் ஏற்பட்டது. அதற்குப் பிறகு ஏசுநாதர் சிலை மட்டும் எந்த பாதிப்பும் இன்றி இருப்பதை அடுத்த பக்கத்தில் உள்ள இரண்டாம் படத்தில் அதிசயத்தோடு பார்க்கலாம்.

---

இந்த நோய் வந்தா, அந்தப் பகுதிகள்ல இருக்கிற அத்தனை பேருக்கும் பரவி ஏராளமான ஜனங்க கூட்டம் கூட்டமா செத்துப் போவாங்க. இந்த



நாஸ்டர்டாம்ஸ் டாக்டருக்குப் படிச்சதாலே இவரும் சிரத்தையெடுத்து அந்தக் காலரா நோய் கண்டவர்களுக்கு சிகிச்சை செஞ்சாரு. ஆனா அந்த சிகிச்சை ரொம்ப வித்தியாசமானது. இவரு படிச்ச படிப்பை வச்சு வைத்தியம் பண்ணலை. இவரோட சிகிச்சை முறையே ரொம்ப வித்தியாசமாவும் இருந்தது.

ஏதோ மந்திரம் மாயம் மாதிரிதான் இருந்தது. நம்பற மாதிரியும் இல்லே. ஆனா இவருகிட்ட வந்தவங்கள்ல பெரும்பாலானவங்க குணம் அடைஞ்சாங்க. அதனால

இவரு பேரு அந்த ஏரியாவுல ரொம்பப் பிரபல்யமானது.

மாங்கு மாங்குன்னு படிச்சு, பட்டம் வாங்குன மத்த டாக்டர்களெல்லாம் நாஸ்டர்டாம்ஸைப் பத்தி அரசாங்கத்துக்கிட்ட புகார் செஞ்சாங்க. இவர் மேல விசாரணை வந்தது. இவரும் உண்மைய ஒத்துக்கிட்டாரு.

"படிச்சதை வச்சு நான் வைத்தியம் பண்ணலை. என் மனசுக்கு நல்லதுன்னுப் பட்டதை வச்சுக்கிட்டுத்தான் வைத்தியம் செய்யறேன்"னு ஒத்துக்கிட்டாரு.

அதனால, அரசாங்கம் இவரோட மருத்துவப் பட்டத்தை ரத்து செஞ்சிருச்சு. அரசாங்க சம்பளம் வாங்கிக்கிட்டிருந்த டாக்டர் வேலையும் பறி போயிடுச்சு. இருந்தாலும், இவங்க சொந்தபந்தமெல்லாம் அந்த சமயம் பார்த்து இவருக்கு ஒரு கல்யாணத்தையும் பண்ணி வச்சிட்டாங்க. குடும்பப் பொறுப்பு நாஸ்டர்டாம்ஸ் தோள்மேல விழுந்தது.

ஏற்கனவே, பிரான்ஸ் நாட்டுல இவரது மருத்துவப் பட்டம் ரத்தானதால, இவரு பேரும் கொஞ்சம் ரிப்பேராயிடுச்சு. எங்க போனாலும், வேலை கிடைக்கலை.

அதனால, வேலை தேடி இத்தாலிக்குப் போனாரு. வேலை தேடறதுங்கிறது அப்பவும் சிரமமான வேலைதான். இந்த நாஸ்டர்டாம்ஸோட நண்பரான **ஸ்காலிஜர்** என்பவரும் இத்தாலிக்கு கூடப் போனாரு. ரெண்டு பேரும் சாப்பாட்டுக்குக் கூட வழியில்லாம தெருவுல நடந்து போயிட்டிருந்தாங்க. சோத்துக்கு வழியில்லாட்டியும் டாக்டருக்கெல்லாம் படிச்சதால

நாஸ்டர்டாம்ஸ் ஓரளவு நாகரீகமாகவே உடையணிஞ்சிருந்தாரு. சூட் கோட்டெல்லாம் போட்டிருந்தாரு.

அப்போ தெருவுல கிழிஞ்ச சட்டை போட்டுக்கிட்டு ஒரு இளைஞன் எதிர்த்தாப்புல வந்தான். ஏறத்தாழ பிச்சைக்காரன் மாதிரி அவரு இருந்தாரு. சூட்டும் கோட்டும் போட்ட நாஸ்டர்டாமுக்குப் பக்கத்துல அந்த இளைஞன் வந்தான்.

"ஹலோ சார்"ன்னு ஏதோ பேச்சுக் கொடுத்தான். அப்பத்தான் நாஸ்டர்டாம்ஸ் அந்த இளைஞனோட முகத்தைப் பார்த்தாரு. அந்த முகத்தைப் பார்த்தவுடனே நாஸ்டர்டாம்ஸ் மனசுல ஏதோ ஒண்ணு பொறி தட்டுச்சு. என்ன நினைச்சாரோ தெரியலை. நாஸ்டர்டாம்ஸ் பிச்சைக்காரன் மாதிரியிருந்த அந்த இளைஞன் கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்குனாரு.

பக்கத்துல இருந்த நண்பர் ஸ்காலிஜருக்கும் ஒண்ணும் புரியலை. அவரும் அந்த இளைஞனை முன்னபின்ன பார்த்ததில்லே. ஆசீர்வாதம் வாங்கி மேலே எழுந்திரிச்ச நாஸ்டர்டாம்ஸ்கிட்ட நண்பர் ஸ்காலிஜர்.

"என்ன நாஸ்டர்டாம்ஸ்.. இந்த ஆளை உங்களுக்கு முந்தியே தெரியுமா? நான் இவரைப் பார்த்ததேயில்லையே?"ன்னு ஆச்சரியமா கேட்டாரு. அதுக்கு நாஸ்டர்டாம்ஸ் சொன்ன பதில், **"நானும் இவரை முன்னப் பின்ன பார்த்தில்லை."**

இப்படி நாஸ்டர்டாம்ஸ் சொன்னவுடனே, அந்த கிழிஞ்ச சட்டை போட்ட இளைஞன், பேந்த பேந்த முழிச்சான்.

தன்னோட நிலைமைய தெளிவா விளக்கியிடணும்னு

அந்த இளைஞன் நினைச்சான். தன் கால்ல விழுந்து எழுந்த நாஸ்டர்டாம்ஸ் கையைப் புடிச்சிக்கிட்டான்.

"சார்! நீங்க என்னை வேற யாரோன்னு நினைச்சிட்டீங்க போலிருக்கு. நீங்க எல்லாம் வசதி படைச்சவங்க. என் கால்ல விழுந்து ஆசீர்வாதம் வாங்கற அளவுக்கு என்கிட்டே ஒண்ணுமேயில்லை. என் பேரு **பிளக்ஸிஸ் பெரிடி**. உண்மையைச் சொல்லப்போனா, நான் உங்க பக்கத்துல வந்தது ஏதாவது உங்ககிட்ட உதவி கேட்கலாம்னுதான்." இந்தளவுக்கு கந்தலணிஞ்ச அந்த இளைஞன் சொன்னப்பக்கூட நாஸ்டர்டாம்ஸ் ஷாக் ஆகலை!

அந்த இளைஞன் கிட்ட ரொம்ப மரியாதையாவே பேசினாரு. "சார்! உங்க பேரு பிளக்ஸிஸ் பெரிடின்னு இப்ப நீங்க சொல்லித்தான் எனக்குத் தெரியும். நானும் உங்களை முன்ன பின்ன பார்த்தது இல்லைதான். இருந்தாலும், உங்க முகத்தைப் பார்த்தவுடனே என் மனசுல ஏதோ ஒரு உள்ளுணர்வு! கூடிய சீக்கிரம் உங்களுக்கு கடவுளோட கருணை நிச்சயம் கிடைக்கும். இப்ப நீங்க என்கிட்டே உதவி கேட்கிற நிலைமை இருந்தாலும், ஒரு நாள் உலகமே உங்க பேச்சையும் உதவியையும் கேட்கிற நிலைமைக்கு வரும்."

நாஸ்டர்டாம்ஸ் சம்பந்தமில்லாம சொன்னதைக் கேட்டு, அவர் கூட இருந்த நண்பர், ஸ்காலிஜர் ஒரேயடியா குழம்பிப் போயிட்டாரு. புதுசா கல்யாணமான சூழ்நிலையில டாக்டர் வேலையும் போயி, நாஸ்டர்டாம்ஸுக்கு புத்தி பேதலிச்சிருச்சு. மொதல்ல இவருக்கு எப்படியாவது ஒரு நல்ல வேலையை வாங்கிக் கொடுத்திடணும்னு அந்த நல்ல நண்பர் தீர்மானிச்சார்.

இந்த சம்பவம் நடந்து, ரொம்ப நாள் வரைக்கும் கூட நாஸ்டர்டாம்ஸுக்கு ஒரு நல்ல வேலை கிடைக்கலை. சில பல மாதங்கள் நாஸ்டர்டாம்ஸ் வாழ்க்கை கஷ்ட ஜீவனத்துல போயிட்டிருந்தது.

அந்த சமயத்துல இத்தாலி தலைநகரான ரோம்





போப் ஆண்டவர் முதலாம் ஜான்பாலைப் பற்றி நாஸ்டர்டாம்ஸ் குறிப்பிட்டபடியே நடந்தது. அவரது மரணம் பற்றிய புதிர் இன்றும் விடுவிக்கப்படாமலேயே உள்ளது. அதை முன்கூட்டியே கணித்துச் சொன்னவர் நாஸ்டர்டாம்ஸ் தான். அதேபோல் போப் ஆண்டவர் இரண்டாம் ஜான்பால் பற்றியும் நாஸ்டர்டாம்ஸ் கணித்துள்ளார். அவர் சொன்னபடியே 1981ம் ஆண்டு போப் ஆண்டவரை கொல்லும் முயற்சி நடந்தது.

நகரத்துல போப் ஆண்டவரா புதுசா ஒருத்தரை தேர்ந்தெடுத்தாங்க. அவர் பேரு, என்ன தெரியுங்களா?

**ப்ளக்ஸிஸ் பெரிடி!**

நடுத்தெருவுல நாஸ்டர்டாம்ஸ் ஆசிர்வாதம் வாங்குன அதே இளைஞன்தான் இந்த ப்ளக்ஸிஸ் பெரிடி.

இந்த ப்ளக்ஸிஸ் பெரிடி போப் ஆண்டவரா தேர்ந்தெடுக்கப்பட்டாலும், நாஸ்டர்டாம்ஸோ அல்லது அவரு கூட வந்த நண்பர் ஸ்காலிஜரோ அந்தப் போப் ஆண்டவரைப் போய் பார்க்கலை. ஏன்னா, ப்ளக்ஸிஸ் பெரிடியை இவங்க சந்திச்சதோ, அப்ப அந்த இளைஞர் ப்ளக்ஸிஸ் பெரிடின்னு பேர் சொன்னதுகூட இவங்க ஞாபகத்துல இல்லை.

ஆனா, அந்த ப்ளக்ஸிஸ் பெரிடி இதை மறக்கலை. வாழ்க்கையில ரொம்ப கஷ்டப்பட்டுட்டு அடுத்தவங்கக்கிட்ட உதவிக் கேட்கிற நிலைமையில இருந்தப்பவே, தன்னைப் பத்தி ரொம்ப உயர்வா சொன்ன நாஸ்டர்டாம்ஸை அவரு மறக்கவேயில்லை. செல்வாக்கும் அதிகாரமும் உள்ள போப்பாண்டவரா ஆனவுடனே, ரொம்ப சிரமப்பட்டு தேடிக் கண்டுபிடிச்சு நாஸ்டர்டாம்ஸை வரவழைச்சாரு. போப்பாண்டவர் வாயால நடந்த இந்த சம்பவங்களை மத்தவங்க கேட்டப்போ, நாஸ்டர்டாம்ஸோட பேரு ரொம்பப் பிரபல்யம் ஆக ஆரம்பிச்சது.

இந்த நேரத்துல நாஸ்டர்டாம்ஸோட மனைவி அந்த ஏரியாவுல பரவுன கொள்ளை நோயில காலமாயிட்டாங்க. சீக்கிரமாவே நாஸ்டர்டாம்ஸுக்கு ரெண்டாவது கல்யாணத்தையும் பண்ணி வெச்சிட்டாங்க. இந்தக் காலகட்டத்துக்கு அப்புறம்தான் நாஸ்டர்டாம்ஸ், மத்தவங்களைப் பத்தி பெரிய அளவுல

கணிப்புச் சொல்ல ஆரம்பிச்சாரு.

இப்படி எதிர்காலத்தப் பத்தி, நாஸ்டர்டாம்ஸ் சொல்றதுக்கு அவருக்கு என்ன தகுதி இருந்தது?

அதைப் பத்தி அவரே ஒரு இடத்துல சொல்லியிருக்கிறாரு.

"என்னோட முன்னோர்களுக்கு எதிர்காலத்தைக் கணிக்கும் ஆற்றல் இருந்தது. அதனால, பரம்பரை சொத்தா இது எனக்கு வந்து சேர்ந்திருக்கலாம். அதுக்கடுத்து இயற்கையாவே எனக்கு வானவியல் சாஸ்திரத்துல நிறைய ஈடுபாடு உண்டு. அந்த ஞானம் கூட எதிர்காலத்தக் கணிக்க எனக்கு உதவியா இருந்திருக்கலாம். இதுக்கு அடுத்து ஒரு மேஜிக்கல் பவர். இது என்ன எப்படின்னு என்னாலேயே விவரிச்சு சொல்ல முடியலை.. இந்த அப்நார்மல் பவராலகூட நான் எதிர்கால பலன்களைச் சொல்ல முடிஞ்சிருக்கலாம்."

ஆரம்பக்கட்டத்துல நாஸ்டர்டாம்ஸ் ஒரு வருஷத்துக்கு உண்டான கணிப்புகளைத்தான் எழுதினாரு. அந்த பலாபலன்களெல்லாம் அடுத்த வருஷமே கரெக்டா நடந்தது. எனவே நாஸ்டர்டாம்ஸ் வருஷா வருஷம் பஞ்சாங்கம் மாதிரி தன்னுடைய கணிப்புகளையெல்லாம் எழுதி பிரசுரமும் செஞ்சாரு.

இதனால நாஸ்டர்டாம்ஸ் பேரு அப்போ பிரான்ஸை ஆண்டுகிட்டு வந்த ரெண்டாம் ஹென்றி காதுவரைக்கும் எட்டியிருச்சு.

அந்த ராஜாவும் நாஸ்டர்டாம்ஸை கூப்பிட்டாரு. தன் குடும்பத்தோட பலாபலன்களையெல்லாம் சரியாப் பார்த்துச் சொல்லச் சொன்னாரு. நாஸ்டர்டாம்ஸ் ரொம்ப ராஜ பக்தி உள்ளவர். வெளிப்படையா

சொல்லப் போனா, ஒரு அப்பாவி! பயந்த சுபாவம் உள்ளவர்.

ராஜாவே தன்னைக் கூப்புட்டு அனுப்பிச்சிருக்காருன்னு சொன்னவுடனே, பதறிப் போனாரு.

உடனே, ராஜசபைக்குப் போனாரு. அங்கே, அந்த ராஜாவோட ஜாதகத்தையெல்லாம் கணிச்சாரு.

"உங்க வாரிசுகள் நாலு பேரும் ராஜாவா வருவாங்க. நல்லபடியா இருப்பா"ங்கன்னு சந்தோஷமா சொன்னாரு.

இதில ஆனந்தப்பட்ட அந்த இரண்டாம் ஹென்றி, நாலு பெட்டி நிறைய தங்கக் காசுகளை நாஸ்டர்டாம்ஸுக்குக் கொடுத்தனுப்பினாரு. தன்னோட கணிப்புகளுக்கு இவ்வளவு பெரிய வெகுமதி கிடைக்கும்னு நாஸ்டர்டாம்ஸ் நினைச்சுக்கூடப் பார்க்கலை. இது அவருக்கு ஒரு ஊக்கப் போனசா ஆயிடுச்சு.

உற்சாகப்பட்ட நம்மாளு, அதுக்கப்புறம் பஞ்சாங்கம் மாதிரி வருஷா வருஷம் பலன் எழுதறதை நிறுத்திட்டு, ஒரு ஐம்பது வருஷத்துக்கு உண்டான உலக நடப்புகளை எழுதி, ஒரு புஸ்தகமாவும் போட்டாரு. அதாவது, அவரோட கண்ணோட்டம் பிரெஞ்சு நாட்டையும் தாண்டி, அப்ப இருந்த ஐரோப்பா நாடுகளைப் பத்தியும் துணிச்சலா கணிச்சாரு.

அந்த புஸ்தகத்தை 1556-ம் வருஷத்துல வெளியிட்டாரு. அப்பவே அந்தப் புத்தகம் சூப்பரா சேல்ஸ் ஆச்சு. ரொம்பப் பரபரப்பாவும் ஐரோப்பிய நாடுகள்ல இதைப் பத்தி விமர்சிச்சாங்க. ஆனா, அந்த புஸ்தகத்துல பிரான்ஸ் ராஜாவான இரண்டாம்

ஹென்றி பற்றி ஒரு குறிப்பை நாஸ்டர்டாம்ஸ் எழுதியிருந்தாரு.

அது என்னன்னா?

பிரான்ஸ் நாட்டு ராஜா **இன்னும் மூணு வருஷத்துல** காலாமாயிடுவார்னு நாஸ்டர்டாம்ஸ் ஒரு போடு போட்டிருந்தாரு.

இந்த புத்தகம் வெளி வந்தப்போ ரெண்டாம் ஹென்றி ரொம்ப திடகாத்திரமாவே இருந்தாரு. இந்த செய்தி அந்த ராஜா காதுக்கும் போனது. ராஜாவும் உடனே நாஸ்டர்டாம்ஸை வரச் சொல்லி ஆள் அனுப்பினாரு.

இப்பத்தான் நாஸ்டர்டாம்ஸுக்கே ஞாபகத்துக்கு வந்தது. நாலு பெட்டி நிறைய தங்கக் காசுகளைக் கொடுத்த ராஜாவாச்சே.. அந்த பரோபகாரி இன்னும் மூணு வருஷத்துல போயிடுவார்னு எழுதியிருக்கிறோமே! நிச்சயமா அந்த ராஜா தங்கக் காசுகளைத் திருப்பி வாங்கறதோட, தனக்கு பெருசா ஏதாவது தண்டனைக் கொடுத்தாலும் கொடுப்பாருன்னு நாஸ்டர்டாம்ஸ் பயந்துட்டேதான் அந்த ராஜா முன்னால போயி கை கட்டி நின்னாரு.

ஆனா, பெருந்தன்மையான ராஜா அப்படியெல்லாம் செய்யலை. நாஸ்டர்டாம்ஸோட தீர்க்கதரிசனமான வார்த்தைகளை பாராட்டற மாதிரியே பேசுனாரு.

"உங்க புத்தகத்துல எழுதினபடி நடக்குமா?"ன்னு அந்த ராஜாவும் ஒரு கேள்வியைக் கேட்டு வச்சாரு.

ஏன்னா, அது அவரோட ஜீவமரண விஷயமாச்சே... ராஜா இப்படிக் கேட்டவுடனே நாஸ்டர்டாம்ஸால மூஞ்சியில அடிச்ச மாதிரி பதில் சொல்ல முடியலை.

"என்னமோ என் மனசுல பட்டதை நான் எழுதிட்டேன் ராஜா! ஆனா, ஆண்டவன் கிருபையால அப்படி நடக்காம போகவும் வாய்ப்புண்டு"ன்னு நாஸ்டர்டாம்ஸ் சமாதானம் சொன்னாரு.

கொஞ்ச நாள்ல இந்த விஷயத்தை எல்லாரும் மறந்துட்டாங்க. ரெண்டு வருஷம் ஓடிப் போச்சு. 1559-ம் வருஷம். அந்த வருஷம் இரண்டாம் ஹென்றியோட மகனுக்கு பிரான்ஸ் நாட்டுல விமரிசையாக் கல்யாணம் நடந்துச்சு. ஏக தடபுடலா விருந்து உபசாரங்கள். அந்த நாட்டு வழக்கப்படி வீர விளையாட்டுக்களும் ஆரம்பமாயிடுச்சு. நல்ல ஆரோக்கியமா இருந்த ரெண்டாம் ஹென்றி ராஜாவும் ஈட்டி வாள் எல்லாம் எடுத்துக்கிட்டு வீர விளையாட்டுல கலந்துக்கிட்டாரு.

அந்த ஆரவாரமான சந்தோஷத்தப்போ, இரண்டாம் ஹென்றிக்கோ அவரது குடும்பத்தாருக்கோ நாஸ்டர்டாம்ஸ் எச்சரிக்கை செஞ்சது கொஞ்சம் கூட ஞாபகத்துக்கு வரலை. இந்த வீர விளையாட்டுல சாமர்த்தியமான மத்தவங்களும் கலந்துக்கிட்டாங்க. அதுல் ஒருத்தர் கையில கூரான ஈட்டியை வச்சுக்கிட்டு, குதிரை மேல ஸ்பீடா வந்துட்டிருந்தாரு. திடீர்னு யாருமே எதிர்பார்க்காத நேரத்துல அந்த வீரனோட குதிரையின் கால் மடங்கி, அந்த வீரன் குதிரையிலிருந்து கீழே விழுந்தான். இதனால, அவன் கையிலிருந்த கூரான ஈட்டி பேலன்ஸ் தவறி கையை விட்டுப் போயிருச்சு. அந்த ஈட்டி, எதிர்த்தாப்புல குதிரை மேல வந்துட்டிருந்த ராஜாவை நோக்கி ரொம்ப கரெக்டா போச்சு.

அடுத்த நிமிஷம், அந்த ஈட்டி அவர் கபாலத்தை துளைச்சு ராஜா அந்த நிமிஷமே கீழே விழுந்தாரு. அவசரமா, ராஜ வைத்தியர் வரவழைக்கப்பட்டாரு.

எவ்வளவோ சிகிச்சையெல்லாம் செஞ்சு பார்த்தாங்க. ஆனா, இரண்டாம் ஹென்றி அந்த எதிர்பாராத விபத்துல காலமாயிட்டாரு.

அப்பதான் நாஸ்டர்டாம்ஸ் சொன்ன கணிப்பு எல்லாருக்கும் ஞாபகத்துக்கு வந்தது. அந்தக் கணிப்புகளை அரசர அவசரமா எடுத்து இப்போ புரட்டிப் பார்த்தாங்க. அதுல இரண்டாம் ஹென்றிக்கு **குதிரை மேல சவாரி செய்யறப்போ மரணம் சம்பவிக்கும்னு** நாஸ்டர்டாம்ஸ் கரெக்டா கணிச்சிருந்தாரு.

ஆரோக்கியமா இருக்கிற ஒரு ராஜாவோட மரணத்தை அதுவும், மூணு வருஷத்துக்குள்ளேன்னு சொல்றதே அதிசயம். அதிலேயும் கரெக்டா அந்த ராஜா குதிரை மேல சவாரி செய்யறப்போ மரணம் சம்பவிக்கும்னு சொல்றது தீர்க்கதரிசனத்தைத் தவிர, வேற என்னவா இருக்க முடியும்?

அதே சமயத்துல இது மாதிரி மேஜிக்கல் பவரா நாஸ்டர்டாம்ஸ் சொன்னது அவரு தலைக்கு ஆபத்தையும் கொண்டு வர ஆரம்பித்தது.

ஏன்னா, இது மாதிரி கணிப்புகளை சொல்றவங்க கடவுளுக்கு எதிரான சைத்தான்கள்னு அப்ப இருந்த பாதிரியார்களும் சர்ச்சும் நினைச்சது.

விஞ்ஞானக் கணிப்புகளைச் சொல்றவங்களுக்குக் கூட அந்தக் காலகட்டத்துல தண்டனைதான் கொடுத்திருக்காங்க. நல்ல வேளையா, நாஸ்டர்டாம்ஸ் தலை, இதுல எப்படியோ தப்பிச்சிருச்சு. அதுக்குக் காரணம் செத்துப் போன ரெண்டாம் ஹென்றி ராஜாவோட மனைவி, **காத்தரீனும்** சொல்லலாம்.

அந்த அம்மையாரும், நாஸ்டர்டாம்ஸ் மேல ரொம்ப மரியாதை வச்சிருந்தாங்க. ரெண்டாம் ஹென்றி காலமானதால அவர் மகன் ஒன்பதாம் சார்லஸ் ராஜாவா முடிசூட்டப்பட்டாரு. இந்த ஒன்பதாம் சார்லஸ் அப்போ, மைனரா, சின்ன வயசா இருந்ததால, அம்மா கேத்தரின்தான் ராஜ காரியங்கள்ல தலையிட்டு மகனுக்கு உதவியா இருந்தாங்க.

இந்த ஒன்பதாம் சார்லஸ் முடிசூட்டு விழா நடக்கறப்போ, நாஸ்டர்டாம்ஸ் தன்னுடைய கிராமத்துல வாழ்ந்துட்டிருந்தாரு. ஒரு சமயம், இந்த ஒன்பதாம் சார்லஸும் அவங்க அம்மா கேத்தரினும் நாஸ்டர்டாம்ஸ் இருந்த கிராமத்துக்குப் பக்கத்துல இராஜாங்க வேலையா போக வேண்டியிருந்தது.

அந்தக் கேத்தரின் அம்மையார் மறக்காம அந்தப் பகுதியிலுள்ள நாஸ்டர்டாம்ஸை வரச் சொல்லி, மனம் விட்டுப் பேசினாங்க.

தன்னோட கணவர் இரண்டாம் ஹென்றி, நாஸ்டர்டாம்ஸ் சொன்னபடியே காலமானது துக்கமான சம்பவமா இருந்தாலும், அதை முன்கூட்டியே இம்மி பிசகாம நாஸ்டர்டாம்ஸ் சொன்னதை பாராட்டினாங்க. நாஸ்டர்டாம்ஸை தன்னோட அரண்மனைக்கு அவசியம் வரணும்னு அந்த அம்மையார் வேண்டுகோள் விடுத்தாங்க.

கேத்தரீனோட அழைப்பை ஏத்துக்கிட்ட நாஸ்டர்டாம்ஸ் கொஞ்ச நாள்ல அரண்மனைக்கு வந்தாரு. தன்னோட ராஜ வம்சத்தின் எதிர்காலத்தைப் பத்தி கணிச்சு சொல்லும்படி கேத்தரீன் நாஸ்டர்டாம்ஸைக் கேட்டுக்கிட்டாங்க. நாஸ்டர்டாம்ஸ் தரையில ஏதேதோ விசித்திரமான

சித்திரங்களையெல்லாம் வரைஞ்சுட்டு அதுல உட்கார்ந்தபடியே அவங்க குடும்பத்தோட பலன்க்ளையெல்லாம் கணிச்சாரு.

"கேத்தரின் இனி அதிக நாள் உயிர் வாழமாட்டாங்க. ஆனா, இரண்டாம் ஹென்றியோட வாரிசுகள் நல்ல முறையில பிரான்சு நாட்டை ஆளுவாங்க"ன்னு நாஸ்டர்டாம்ஸ் கணிச்சு சொன்னாரு.



நாஸ்டர்டாம்ஸ் இறந்தபிறகு இந்த அபூர்வ காட்சி செதுக்கி வைக்கப்பட்டுள்ளது. இதில் நாஸ்டர்டாம்ஸ் தனது மனோ ஆற்றலால் தரையில் உட்கார்ந்து ஏதோ தீர்க்கதரிசனம் சொல்லுவதும் அதை அந்த நாட்டு ராணி கேத்தரின் தனது எதிரில் உள்ள கண்ணாடி வழியாக பிம்பங்களாக காண்பதையும் இது சித்தரிக்கிறது.

இந்தக் கணிப்புகள்ல திருப்தியடைஞ்ச கேத்தரினும் நூறு தங்க கிரீடங்களை நாஸ்டர்டாம்ஸுக்குப் பரிசாகக் கொடுத்து கௌரவிச்சாங்க. இது மாதிரி ராஜ குடும்பமே நாஸ்டர்டாம்ஸை மதிச்சதுனால அவருக்கு வேறு தொல்லைகள் வராம தப்பிச்சுக்கிட்டாரு. இல்லாட்டி அந்தக் காலக்கட்டத்துல இருந்த சர்ச்சு இவரு கையில விலங்கு மாட்டி, இவரைச் சிரச்சேதம் செய்திருந்தாலும் ஆச்சரியமில்லை.

ஒரு சமயம், அன்னைக்கு இருந்த ஐரோப்பிய நாடுகளையெல்லாம் வச்சு, ஒரு உலக மேப் தயாரிச்சாங்க. ராஜாங்க அந்தஸ்து பெற்ற இந்த நாஸ்டர்டாம்ஸ்கிட்ட அந்த வரைபடத்தைக் காட்டுனாங்க. அந்த மேப்பையை கொஞ்ச நேரம் நாஸ்டர்டாம்ஸ் உத்துப் பார்த்தாரு. 'இந்த மேப்புல ஒரு தப்பு இருக்கு'ன்னாரு.

"என்னா"ன்னு கேட்டாங்க.

"அந்த மேப்புல கீழ்க்கோடியில **அவிஸ்டிரேலியஸ்ன்னு** நாலு பக்கம் தண்ணி சூழ்ந்த ஒரு பெரிய நிலப்பரப்பு இருக்கு"ன்னு நாஸ்டர்டாம்ஸ் சொன்னதோட, "அதையும் நீங்க வரையணும்"னு சொன்னாரு. ஆனா, அப்படியொரு நிலப்பரப்பு இருக்கிறதா அந்த வரைபடம் வரைஞ்சவங்களுக்கு ஆதாரமே கிடைக்கலை.

இதுக்கப்புறம் ரொம்ப வருஷம் கழிச்சு, கடல் பயணங்கள் ரொம்ப பிரசித்தி ஆச்சு.

புதுசு புதுசா ஸ்பீடா போற கப்பல்களையும் கண்டுபிடிச்சாங்க. கடல் மார்க்கமாவே உலகம் பூராத்தையும் முதல் முறையா சுத்திட்டு வரவும் ஆரம்பிச்சாங்க. அப்பதான் உலக உருண்டையில




பிரெஞ்சு புரட்சி வெடித்து பாதிக்கப்பட்ட மக்கள் அரச குடும்பத்தினரை தண்டிக்கும் உருக்கமான காட்சி இது! இப்படி ஒரு புரட்சி, பிரான்ஸ் நாட்டில் உருவாகும் என்பதை நாஸ்டர்டாம்ஸ் கணிச்சு எழுதிய போது மிகவும் வருத்தப்பட்டாராம். ஏனென்றால் நாஸ்டர்டாம்ஸ் ராஜ குடும்பத்தின் மேல் மிகுந்த விஸ்வாசம் உள்ளவர். அதேபோல் பிரெஞ்சு புரட்சிக்குப் பிறகு நெப்போலியன் வந்து பிரான்ஸ் நாட்டின் பெருமையை உலகம் முழுவதும் உணர்த்துவார் என்றும் நாஸ்டர்டாம்ஸ் முன்கூட்டியே கணிச்சு சொன்னார். அதே மாதிரியும் நடந்தது! அந்த வகையில் தனது நாடு பெருமைப்படப் போவதை நினைத்து நாஸ்டர்டாம்ஸ் அவர் வாழ்ந்த காலத்தில் சந்தோஷமும் பட்டுக் கொண்டாராம்.

கீழ்க்கோடியில ஒரு பெரிய நிலப்பரப்பு இருக்கிறதும் தெரிய வந்தது.

அந்த நிலப்பரப்புல அப்போ பழங்குடியினர்தான் அங்கிருந்த கங்காருகளை வேட்டையாடி காலந்தள்ளிக்கிட்டிருந்தாங்க. உலகத்துக்கும் அந்த நிலப்பரப்புல இருக்கிறவங்களுக்கும் எந்தத் தொடர்பும் அதுவரைக்கும் இல்லை.

வரைபடத்துலேயே இல்லாத ஒரு புது நிலப்பரப்பு கடல் நடுவுல கீழ்க்கோடியில இருக்கிறதைப் பார்த்த மாலுமிங்கள்லாம் ரொம்ப ஆச்சரியப்பட்டாங்க. புதுசா ஒரு கண்டத்தையே கண்டுபிடிச்சுட்டோம்னு சந்தோஷமா பிரான்சு நாட்டுக்குப் போயி சொன்னாங்க. அதுக்கப்புறம்தான் ஐரோப்பிய நாடுகள்லேருந்து அந்த கண்டத்துல மற்றவங்கள்லாம் மெல்ல மெல்ல போயி குடியேறுனாங்க. விவசாயம் பண்ணாங்க. தொழில்களையெல்லாம் ஆரம்பிச்சாங்க. புதுசா கண்டுபிடிச்ச அந்த நிலப்பரப்புக்கு ஆஸ்திரேலியான்னு குடியேறுனவங்க பேரு வச்சாங்க.

இவங்க பேரு வச்சப்போ நிச்சயமா நாஸ்டர்டாம்ஸ் அவங்க ஞாபகத்துக்கும் வரலை. அவங்க மனசுக்குப் பட்டமாதிரி ஆஸ்திரேலியான்னு பேரு வச்சாங்க.

இதுக்கப்புறம் நாஸ்டர்டாம்ஸைப் பத்தி ஆராய்ச்சி பண்ணவங்க அவரோட கவிதைகளையெல்லாம் புரட்டிப் பார்க்கிறப்பத்தான் கீழ்க்கோடியில அவிஸ்டிரேலியஸ்னு ஒரு கண்டம் இருக்குன்னு நாஸ்டர்டாம்ஸ் சொன்னதும் தெரிய வந்தது.

நாஸ்டர்டாம்ஸோட இந்தக் கணிப்புகள் எல்லாம் ஆராய்ச்சியாளர்களை வியப்படையச் செய்தது. ஏன்னா நாஸ்டர்டாம்ஸ் அப்ப வாழ்ந்திட்டிருந்தது பிரான்ஸ்




ஆஸ்திரேலியா கண்டமே இல்லாமல் பிரான்ஸ் நாட்டில் வரையப்பட்டு நாஸ்டர்டாமிடம் காட்டிய வரைபடம் இதுதான்.

நாட்டுத் தலைநகரத்துல கூட இல்லை. உண்மையிலேயே தூக்கநாயக்கன் பாளையம் மாதிரி ஒரு கிராமத்துலதான்.

நாஸ்டர்டாம்ஸ் கடல் பயணம் செய்யற மாலுமியும் இல்லே.. உலகம் பூராவும் சுத்திப் பார்க்கிற ஆசையுள்ள யாத்திரீகனும் இல்லை. இருந்தாலும் அப்போது இருந்த உலக வரைபடத்துல அவிஸ்டிரேலியஸ்னு ஒரு கண்டம் நிச்சயமா இருக்குன்னு எப்படி கணிச்சாரு?

இந்த ஆஸ்திரேலியா கண்டம் கண்டுபிடிச்சதுகூட நாஸ்டர்டாம்ஸ் காலமானதுக்கு அப்புறம்தான்! ஆஸ்திரேலியாவை நாஸ்டர்டாம்ஸ் ஏன் அவிஸ்டிரேலியஸ்னு குறிப்பிட்டார்?

இது மாதிரி ஹிட்லர் பேரையும் நாஸ்டர்டாம்ஸ் ஹிஸ்டர்ன்னுதான் குறிப்பிட்டிருக்காரு. இந்தச் சின்ன வித்தியாசங்கள் எல்லாம் ஏன் வந்ததுன்னு இன்னைக்கு வரைக்கும் ஆராய்ச்சியாளர்களால சரியான விளக்கமும் சொல்ல முடியலை.

இரண்டாம் உலகப் போருக்கு காரணகர்த்தாவாயிருந்த ஹிட்லரை நாஸ்டர்டாம்ஸ், தன்னோட கவிதைகள்ல பாரபட்சமில்லாமயும் விமர்சனம் செஞ்சிருந்தாரு.

இந்தக் கணிப்புகளையெல்லாம் ஹிட்லர்னு ஒரு சர்வாதிகாரி உருவாகறதுக்கு முன்னாலங்கிறதை வாசகர்கள் மறந்திடக்கூடாது. ஜெர்மன் நாட்டு சர்வாதிகாரியா ஹிட்லர் ஆனப்பவும், இந்த நாஸ்டர்டாம்ஸ் பேரு உலகம் பூராவும் எதிரொலிச்சுக்கிட்டுத்தான் இருந்தது.

அவரு சொன்ன மாதிரியே ஜெர்மன் நாட்டுல ஒரு சர்வாதிகாரி ஹிட்லர் உருவானதையும் ஜனங்க பேசிக்கிட்டாங்க. அந்த ஹிட்லரைப் பத்தி நாஸ்டர்டாம்ஸ் தன்னோட கவிதைகள்ல என்ன எழுதி வைச்சிருந்தாரு.

*1. ஹிஸ்டர் என்பவர் இரண்டாம் உலகப் போருக்கு காரணமாயிருப்பார்.*

*2. அவர் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்து தன் பேச்சு சாதுர்யத்தால் ஜெர்மன் நாட்டு மக்களைக் கவர்ந்திழுப்பார்.*

*3. இந்த ஹிஸ்டர் பல ஐரோப்பிய நாடுகளை தன்னிடமுள்ள வைல்ட் பீஸ்ட் (காட்டு விலங்குகள்) போன்ற ராணுவத்தை வைத்து, வெற்றி கொள்வார்.*

*4. இந்த ஹிஸ்டர் இலட்சக்கணக்கான மக்களை*

நூதனமான முறையில் கொல்வார். இதற்கு முன் வேறு யாரும் இந்த நூதன முறையைக் கடைப்பிடித்திருக்க மாட்டார்கள்.

5. இந்த கொடுங்கோலனான ஹிஸ்டரின் வீழ்ச்சிக்கு கடல் தாண்டியிருக்கும் ஒரு சின்ன நாடு காரணமாயிருக்கும்.

6. இந்த ஹிஸ்டரின் அராஜகமான மக்களின் படுகொலை செய்யும் கொடூரங்கள் ஜெர்மன் நாட்டுக் குடிமக்களுக்கு தெரியாமலேயே மறைக்கப்படும்.



இலட்சக்கணக்கான யூத இன ஜனங்களை விஷ வாயு குடோன்கள்ல அடைச்சு நூதனமான முறையில ஹிட்லர் கொன்றதைப் பத்தியெல்லாம் நீங்க சரித்திரத்துல படிச்சிருக்கலாம்.

அதே மாதிரி, ஹிட்லரோட வீழ்ச்சிக்கு கடல்தாண்டி இருக்கிற சின்னத் தீவான இங்கிலாந்துதான் காரணமாயிருந்ததும் நாம் எல்லாருக்கும் தெரியும்.

இவ்வளவு கரெக்டா நாஸ்டர்டாம்ஸ் எழுதி வெச்சது ஒரு சமயத்துல ஹிட்லர் கைக்கே போச்சு.

ஹிட்லரும் அந்த கவிதைகளை ரொம்ப உன்னிப்பாப் படிச்சுப் பார்த்தாரு. ஹிட்லர் ரொம்ப சாமர்த்தியசாலி. இந்த நாஸ்டர்டாம்ஸைப் பத்தி உலகம் பூராவும் ஒரு நம்பிக்கை இருக்கிறதை ஹிட்லர் புரிஞ்சுக்கிட்டாரு. தன்னோட பிறப்பு, வளர்ப்பு, முன்னேற்றம் இதையெல்லாம் நாஸ்டர்டாம்ஸ் கரெக்டாதான் சொல்லியிருக்காரு.

ஆனா நாஸ்டர்டாம்ஸ் சொன்ன மாதிரி ஒரு குட்டி நாடால தனக்கு வீழ்ச்சி வராதுன்னு ஹிட்லர் ஆணவமா நம்பினாரு. அதனாலதான் இங்கிலீஷ் கால்வாயைத் தாண்டி இருக்கிற இங்கிலாந்து நாட்டு மேலேயும் படையெடுத்தாரு.

அதே சமயம், நாஸ்டர்டாம்ஸையே தன்னோட நாசிக் கட்சியில சேர்த்துட்டாரு. கோயாபெல்ஸ்ன்னு ஒரு அண்டப்புழுகனை ஹிட்லர் தன்னோட

---

Living fire... Inside Globes என்று முதல் முறையாக ஹீரோஷிமா, நாகசாகி அணுகுண்டு வெடிப்பதைப் பற்றியும் நாஸ்டர்டாம்ஸ் குறிப்பிட்டிருக்கிறார். குண்டு விழுந்த ஹீரோஷிமா பகுதியை விமானத்திலிருந்து எடுத்த புகைப்படம் இது.



முதல் அணுகுண்டு 1945ல் ஆகஸ்டு மாதம் 9ம் தேதி ஹிரோஷிமா, நாகசாகியின் மேல் வெடித்த பிறகு தத்ரூபமாக எடுக்கப்பட்ட புகைப்படம்! குண்டு வெடிப்புக்குப் பின் பசும் சோலையாக இருந்த பகுதிகளெல்லாம் பாலைவனம் போல் காட்சியளிக்கிறது!

---

எதிர்பக்கம் உள்ள படம் ஒரு அபூர்வ புகைப்படமாகும். வானத்தில் பறந்து கொண்டிருப்பது ஒரு போர் விமானம். இந்த விமானம் ஒலி அலைகளைக் காட்டிலும் (சவுண்ட் வேவ்ஸ்) அதிக விரைவாக பறந்து கொண்டிருக்கிறது. அந்த நேரத்தில் அந்த ஒலி அலைகளின் வேலியை (Barrier) உடைப்பதைத்தான் அந்த விமானத்தின் வால் பகுதியில் உள்ள பலூன் போன்ற தோற்றம் தெளிவாக்குகிறது. இதுபோல் ஒலி அலைகளின் உடைப்பை எடுத்த முதல் புகைப்படம் இதுதான். இந்த அளவுக்கு விஞ்ஞான அறிவு பெற்ற மனிதன் இயற்கையின் பாதிப்பான வால் நட்சத்திரத்தையும் வெற்றி கொள்வான் என்றும் நம்புவோம்.

கொள்கைப் பிரச்சார மந்திரியா வச்சிருந்தாரு. அது போதாதுன்னு தீர்க்கதரிசியான நாஸ்டர்டாம்ஸையே ஹிட்லர் தனக்கு சாதகமா பயன்படுத்தவும் ஆரம்பிச்சாரு.

எப்படி?

நாஸ்டர்டாம்ஸ் சொன்ன கணிப்புகள் அடங்கிய புத்தகத்தை வாங்கினாரு. அதுல தன்னைப் பத்தி இருக்கிற உண்மையான விஷயங்களையெல்லாம் கிழிச்சு எறிஞ்சுட்டாரு.

'ஹிட்லர் போன பக்கமெல்லாம் ஜெயிப்பாரு. அவரு உலகத்தையே தனக்குக் கீழே கொண்டு வருவாரு'ன்னு எழுதி, அதை நாஸ்டர்டாம்ஸ் புத்தகத்துல சேர்த்து அச்சடிச்சும் விட்டாரு. அந்தப் புத்தகத்தைப் படிச்சவங்க, ஹிட்லர்தான் உலகத்தையே ஜெயிப்பார்னு நாஸ்டர்டாம்ஸ் சொன்னதா நம்புனாங்க. ஆனா, நாஸ்டர்டாம்ஸ் உண்மையா சொன்னபடி ஹிட்லர் இங்கிலாந்துக்கிட்டே மோதி, அது உலகப் போரா உருவெடுத்து வீழ்ச்சியும் அடைஞ்சாரு.

இதே மாதிரி நாஸ்டர்டாம்ஸ் கணிச்சு அது அப்படியே நடந்த விஷயங்களை பட்டியல் போட்டா அது ரொம்ப நீளமா போகும். இந்த நாஸ்டர்டாம்ஸ் நம்பிக்கைங்கிறது, அவரு பொறந்த பிரான்சு நாட்டுல மட்டுமல்ல உலகத்தோட மத்த நாடுகள்லயும் ரொம்ப ஆழமாவே பாதிச்சிருக்கு. ஜப்பான் நாட்டுல **ஓம்சின் ரிக்யூன்னு** ஒரு அமைப்பு. அதோட தலைவர் சோஅசாபரா. அவருகூட இந்த நாஸ்டர்டாம்ஸ்

எதிர்பக்கம் உள்ள படம்: 1912ம் ஆண்டு முழு சூரிய கிரகணம் ஏற்பட்டபோதுதான் டைட்டானிக் என்ற உலகப் பிரசித்தி பெற்ற கப்பல் யாரும் எதிர்பார்க்காதபடி கடலில் மூழ்கியது.



One will cross through the skies, over land, sea and waves, என்று நாஸ்டர்டாம்ஸ் தனது கவிதைகளில் குறிப்பிட்டிருக்கிறார். அதுபோல் மனிதன் விமானங்கள் மூலம் பறந்ததெல்லாம் அவர் இறந்து 400 வருடங்களுக்குப் பிறகுதான்.

கொள்கைகளை அப்படியே நம்புறவருதான்.

இப்ப அவரு ஜெயில்ல இருக்காரு. காரணம் ஜப்பான் நாட்டு டோக்கியோ நகர சுரங்கப் பாதையில் கேஸ் பாம் வச்சு அதனால 5500 பேரு மயங்கி விழுந்தாங்க! பன்னிரெண்டு பேரு பரிதாபமா செத்துட்டாங்க. இப்படி ஒரு மோசமான காரியத்தை அந்த சோஅசாபரா செய்ய என்ன காரணம்? எல்லாம் நாஸ்டர்டாம்ஸ் கவிதைகளை **தப்புத் தப்பா யூகிச்சதுதான்.**

(இந்த இடத்துல வாசகர்களுக்கு ஒரு முக்கிய விஷயத்தை அறிவுறுத்த விரும்பறோம். நம்ம சென்னையைச் சேர்ந்த பிர்லா கோளரங்க முன்னாள் துணை இயக்குனர் எஸ். கோபிநாத் இந்த சூரிய கிரகணத்தப்ப என்னென்ன அதிசயங்கள் நடக்கும்னு அறிவிச்சிருக்கார் ஆகஸ்ட் மாசம் 18ம் தேதி வரை வானத்தில் எரிகற்கள் விழுவதை காணமுடியும். இவையெல்லாம் வால் நட்சத்திரத்தின் வால் பகுதியிலிருந்து சிதறும் துகள்கள்தான். பூமியை நெருங்க நெருங்க அது வேகமாக எரியத் தொடங்கி 80 கி.மீ. உயரத்திற்குள் முற்றிலும் எரிந்து போய்விடும். இவ்வாறு எரிந்து விழும் கற்கள் வானவெளியில் மத்தாப்பூ சிதறி விழுவதை போன்று காணப்படும்.

பிர்லா கோளரங்க முன்னாள் துணை இயக்குனர் இப்படி விவரிக்கறதெல்லாம் பூமிக்கு வந்து சாம்பலா விழற விண்கற்களைத்தான். இதப்பார்த்து நாஸ்டர்டாம் சொன்னபடி ஏதோ ஒரு வால் நட்சத்திரம் வந்துருச்சுன்னு யாரும் பயந்திடக் கூடாது.

நாஸ்டர்டாம் சொன்னபடி இன்னொரு சூரியனைப் போல வானத்துல ஏழு நாளுக்கு ஒரு வால் நட்சத்திரம் எல்லாருக்கும் தெரிஞ்சாத்தான் நாம யோசிக்கணும்.)

இந்த நாஸ்டர்டாம்ஸ் பேரு உலகம் பூராவும் பரவுறதுக்கும் கூட ஜப்பான் நாட்டு ஒரு பத்திரிகையாளர்தான் மூலகாரணமாக இருந்திருக்கிறாரு. அவரு பேரு பென் போட்டோ. 1969 ஆம் வருஷம் மனிதன் சந்திரன்ல முதல் தடவையா காலடி எடுத்து வச்சான். அந்த அதிசய நிகழ்ச்சியை இந்த நாஸ்டர்டாம்ஸ் 400 வருஷத்துக்கு முன்னாலேயே தன்னோட கவிதைகள்ல எழுதி வச்சிருந்தது இந்த பென் போட்டோவுக்கு தெரிய வந்தது. அதுக்கு அப்புறந்தான் பென் போட்டோ நாஸ்டர்டாம்ஸோட பிரெஞ்சு மொழி கவிதைகளையெல்லாம் துருவித் தோண்டி ஆராய்ஞ்சு அதை ஆங்கிலத்துல மொழிபெயர்த்து உலகத்துக்கு நாஸ்டர்டாம்ஸை அறிமுகப்படுத்தினாரு. அதிலிருந்துதான் நாஸ்டர்டாம்ஸ் பேரு ஏசுநாதர் அளவுக்கு உலகம் பூராவும் ஒட்டுமொத்தமா பரவுச்சு.

இந்த புத்தகத்தை வச்சிட்டு உலகம் பூராவிலும் எத்தனையோ சுவாரஸ்யமான டி.வி. சீரியல் எல்லாம் எடுத்து அது சக்கை போடு போட்டது. இன்னைக்கு இந்த விஞ்ஞான யுகத்துல உலகம் பூராவிலும் பலவிதமான பயங்கள் மனுஷனை தூங்கவிடாம அலைக்கழிச்சிட்டுத்தான் இருக்குது! எப்ப வேணும்னாலும் எந்த குட்டி நாட்டு பிரச்னையும் பெருசாகி அது மூணாவது உலகப் போரா வரலாம். இது எல்லா நாட்டுக்காரர்களுக்கும் இருக்கிற முதல் பயம்.

அடுத்து இயற்கையோட சீற்றங்களும் முன்ன எப்பவும் இல்லாத மாதிரி நெருப்பாகவும், புயலாகவும் வெள்ளமாகவும் மக்களை வாட்டி வதச்சுக்கிட்டிருக்கு. 21ம் நூற்றாண்டு புதுசா தொடங்கப் போற



ஆயிரக்கணக்கான பேர் உலகம் முழுவதும் ரயில் விபத்துக்களில் பலியாகிறார்கள்.



அடிக்கடி ஏற்படும் பூகம்பங்கள்!



இந்த 99ல் வரும் முழு சூரிய கிரகணத்தை
பாதுகாப்பாக பார்ப்பதற்காக பிரான்ஸ் நாட்டில்
அரசாங்கமே பொதுமக்களுக்கு அல்ட்ரா வைலட்டால்
பாதிக்காத கண்ணாடிகளை கொடுத்திருக்கிறார்கள்.

கொண்டாட்டங்கள்ல உலகம் உற்சாகமா
ஈடுபட்டிருந்தாலும் இந்த இரண்டாயிரமாம் ஆண்டு
முடியறதுக்குள்ள இந்த உலகத்துக்கு ஏதோ ஒண்ணு
ஆகுங்கற உள்ளுணர்வும் உலக மக்கள் மனசுல
தங்கிட்டுத்தான் இருக்கு. உலகம் தோன்றுன நாள்ல
இருந்து இந்த மனிதகுலம் இதே மாதிரி எத்தனையோ
சோதனைகளை கடந்து அதுல ஜெயிச்சு
ஜீவிச்சுகிட்டுதான் இருக்கு. இந்த நாஸ்டர்டாம்ஸ்
பயத்துல இருந்தும் நாம சமாளிச்சு
ஜெயிச்சிடுவோம்னே நம்புவோம்... நல்லதே நடக்க
பிரார்த்திப்போம்!

